# முஹம்மது நபி அவர்களும்

(ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்)

# முந்தைய நபிமார்களும்

[ அலைஹி மிஸ்ஸலாம் ]





மௌலானா மௌலவி அல்ஹாஜ்

.M.H.முஹம்மது அலி சைபுத்தீன் ஸூபி ரஹ்

# முஹம்மது நபி அவர்களும்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

# முந்தைய நபிமார்களும்

( அலைஹிமிஸ்ஸலாம் )

009-20/

தொகுப்பாளர் :

மௌலானா, மௌலவி, அல்ஹாஜ்

**S.M.H. முஹம்மது அலி சைபுத்தீன்**

**ரஹ்மானி பாகவி, ஸூபி**

**கலீபத்துல் காதிரிய்யா**

வெளியீடு :

**ஹிஸ்புல்லாஹ் சபை**

**ஸூபி மன்ஸில்கள்,**

இந்தியா, சிறிலங்கா,

# பதிப்புரை

எல்லாம் வல்ல அல்லாஹு தஆலாவின் திருப்பெயரால் துவக்கம். புகழ் அனைத்தும் அவனுக்கே உரித்தாகுக!

உலகை உய்விக்க உதித்த உத்தமர், நபிகள் நாயகர் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், நேர்வழிகாட்டிகளாக தோன்றிய ரஸூல்மார்கள், நபிமார்கள், அவர்கள் தம் கிளைஞர்கள், ஸஹாபாக்கள், இறையன்பர்கள் அனைவர்கள்மீதும் அல்லாஹ்வின் கருணையும், ஈடேற்றமும் உண்டாவதாக!

சிருஷ்டி பொருள்களில் தலைசிறந்த வர்க்கம், மனுக் குல வர்க்கம், அம்மனுக்குல வர்க்கத்தில் தலைசிறந் தவர்கள் ரஸூல்மார்கள், நபிமார்கள் அலைஹிமிஸ்ஸலாம்.

இவர்களில் தலைசிறந்தவர்கள், நிகரற்றவர்கள் நமது நபிகள் நாயகம் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இவர்கள் தானே ஈருலகக் காரண கர்த்தர். எம்மாதும் இவர்கள் போன்று பெற்றெடுக்கவுமில்லை, பெற்றெடுக்கப் போவதுமில்லை. இறைவனும் வேறு எவரையும் இவர்கள் போன்று படைக்கவுமில்லை. படைக்கப் போவதுமில்லை. தேர்ந்தெடுக்கவுமில்லை. தேர்ந்தெடுக்கப் போவதுமில்லை. இவர்கள் இல்லையாயின் அண்ட சராசரமும், அதன் படைப்புகளும் இல்லை.

அப்படிப்பட்ட நாயகத்தின் கீர்த்திகளையும், அற்புதங்களையும், மனமார ஆனந்தமாக, குதுகலமாக

எடுத்துக் காட்டி மீலாது விழாக்கள் கொண்டாடி வரும் இப்புனிதமான ரபீவுல் அவ்வல் திங்களில்,

நபிமார்கள், ரஸூல்மார்களுக்கு அருளப்பட்ட முஃஜிஸாத் அற்புதங்களையும், அவர்கள் கீர்த்திகளையும், தனி சிறப்புகளையும் நமது நாயகத்தின் முஃஜிஸாத் அற்புதங்களையும், அவர்கள்தம் கீர்த்திகள், தனிச் சிறப்புகளையும் ஒப்பிட்டு, நேர்படுத்தி அழகாக தொகுத்து, கண்ணியத்திற்குரிய மௌலானா மௌலவி முஹம்மது அலி சைபுத்தீன் ஆலிம் ரஹ்மானி பாகவி கலீபத்துல் காதிரி ஸூபி அவர்கள் "முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் முந்தைய நபிமார்கள் அலைஹிமிஸ்ஸலாம்" என்ற தலைப்பில் 1976-ம் ஆண்டு வெளியிட்டிருந்த நூலை, தொகுப்பாளரின் அனுமதியோடு இக்காலத்திற்கு தேவை எனக் கருதி மறுபதிப்பு செய்து வெளியிடுவதில் பேரானந்தமடைகின்றோம். ஏக இறைவன் இந்நூலின் மூலம் மென்மேலும் பெருமானார் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பேரில் நேசத்தை பாசத்தை அதிகமாக்கி அவர்கள்தம் பிரியர்களாக, தொண்டர்களாக வாழ அருள் புரிவானாக.

ஆமீன்.

இவண்,

**ஹிஸ்புல்லாஹ் சபை**

**ஸூபி மன்ஸில்கள்,**

இந்தியா, சிறிலங்கா

# முஹம்மது நபி அவர்களும்

(ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்)

# முந்தைய நபிமார்களும்

(அலைஹிமிஸ்ஸலாம்)

(தில் கற்றுஸுலு - பழ்ழ்ல்னா - பஃழஹும்................) "அந்த ரஸூல்மார்களில் சிலரை சிலரைக் காண (சில சிறப்பியல்புகளைக் கொண்டு) நாம் மேன்மைப்படுத்தி யிருக்கிறோம். அவர்களில் அல்லாஹ் (நேரடியாக) பேசியவர்(களான மூஸா அலைஹிஸ்ஸலாம் போன்றவர்) களும், அந்தஸ்துகளை உயர்த்தியவர்(களான முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்)களும் இருக்கிறார்கள்."

அல்குர்ஆன் 2:253

அல்லாஹுத்தஆலாவின் படைப்பினங்கள் அனைத்தி லும் மிக்க சிறப்புற்றவர்கள், மக்களுக்கு நேர்வழிகாட்டிளாக அனுப்பபட்ட ரஸுல்மார்களும், நபிமார்களுமாவார்கள்.

இவர்களின் அந்தஸ்தை அவர்களல்லாது வேறு எவரும் எட்ட முடியாது. ஐயமில்லை.

உத்தமர்களான இவர்களுக்குமிடையிலும் ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன என்பதையே மேற்கண்ட திருமறை வசனம் எடுத்தியம்புகின்றது.

எனவேதான் அவர்களில் ஒருவரான அபுல்பஷர் மானிட வர்க்கத்து பிதா ஆதம் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள், "ஸபியுல்லாஹ் - அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக் கப்பட்டவர்கள்" என்ற பெயரையும்,

அவ்வலுற்றஸூல் - முதல் தூதர் என்ற அரும் பெயர் பெற்ற நூஹ் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "நஜியுல்லாஹ் - அல்லாஹ்வோடு இரகசியம் பேசியவர்கள்" என்ற பெயரையும்,

இப்றாஹீம் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "கலீலுல்லாஹ் - அல்லாஹ்வின் அன்பர்" என்ற பெயரையும்,

இஸ்மாயீல் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "தபீஹுல்லாஹ் - அல்லாஹ்வின் பாதையில் தன்னை பலியிட சித்தமானவர்கள்" என்ற பெயரையும்,

மூஸாநபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "கலீமுல்லாஹ் - அல்லாஹ்வோடு (நேரடியாக) வசனித்தவர்கள்" என்ற பெயரையும்,

ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "ரூஹுல்லாஹ் - அல்லாஹ்வின் ஆன்மா" என்ற பெயரையும்,

நம் அருமை நபி அண்ணலெம் பெருமானார் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "ஹபீபுல்லாஹ் - அல்லாஹ்வின் நேசர்" என்ற பெயரையும் பெற்றிருக் கின்றனர்.

## தலைமைப்பீடம் தரித்த தய்ர்ளர்:

உலகத்தார்களில் மிக வருசையானவர்களும், ஆக உயர் பதவியைப் பெற்றவர்களும், அத்துனை நபிமார்கள், ரஸூல் மார்களுக்கும் தலைமையானவர்களும் நமது நாயகம் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களே தான்.

இது பற்றி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களே நவின்றுள்ளார்கள்! மறுமையில் நான் ஆதமுடைய மக்களுக்கெல்லாம் நாயகமானவனாகயிருக்கும் எனக்குப் பெருமையில்லை. எனது கையில் லிவாவுல் ஹம்து எனும் கொடி இருக்கும் எனக்குப் பெருமையில்லை. ஆதமும், அவர் களல்லாத மற்ற நபிமார்களும் என்னுடைய கொடியின் கீழ் இருப்பார்கள். (மறுமையில்) பூமியிலிருந்து வெளிக் கிளம்புவதில் நானே முதல்வன். எனக்குப் பெருமையில்லை.

(அறிவிப்பாளர்:- அபூஸயீது, நூல்:- திர்மிதீ)

அதாவது:- எனக்கு இவைகளினால் பெருமையில்லை, எனினும் நான் என்னுடைய போஷகனளவில் தொடர்புக்

கொண்டிருப்பதைக் கொண்டே தான் எனக்குப் பெருமை ஏன் நான் அவனல்லாதவைகளளவில் திரும்பிப் பார்க்க மாட்டேன். எனினும் ஆதமும் அவர்களல்லாதவர்களும் என்னுடைய கொடியின் கீழ் இருப்பார்கள் என்று சொல்வதினால் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும் நாயகமானவர்களா யிருக்கும் என்பதின் பேரில் சயிக்கினை செய்திருக்கிறார்கள்.

(ஆதாரம்:- "மிர்ஆத்துல் ஹகாயிகு" தமிழில் - ஷெய்கு நாயகம் சூபி ஹழ்ரத் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட "அகமியக் கண்ணாடி" எனும் நூல்.)

மேலும் தெளிவாகவே அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அருளினார்கள்:-

"ஷபாஅத் - மன்றாடுபவர்களில் நானே முதல்வன். அதை அங்கீகரிக்கப்படுபவர்களிலும் நானே முதல்வன். எனக்குப் பெருமையில்லை. சொர்க்கத்தின் (கதவின்) வளையத்தை அசைப்பவர்களிலும் நானே முதன்மையானவன். நானே முன்னோர்கள், பின்னோர்களில் சிறப்பானவன். நபிமார்கட்கு இமாமும் நானே தான்."

(அறிவிப்பாளர்:- இப்னு அப்பாஸ், நூல்:- திர்மிதீ)

இமாம் பூஸரி (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் தங்களது 'ஹம்ஸிய்யா'பாக்களை (கய்ப-தற்கா-ருக்யகல் அன்பியாஉ) மற்ற நபிமார்கள் உங்களது படித்தரங்களில் எப்படி ஏற முடியும்? என்ற கேள்வி நயத்தோடே தொடங்கி நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களது சிறப்பியல்புகளை பற்றி பாடுகிறார்கள்.

## நபிமார்களும், அற்புதங்களும்

முந்தைய ரஸூல்மார்கள், நபிமார்களுக்கு அவ்வப்போது அவசியமான முஃஜிஸாத் அற்புதங்கள் பல கொடுக்கப் பட்டன. இது பற்றி திருமறை வசனமும், திவ்விய வரலாறும் பறைசாற்றுகின்றது.

நபிகள் திலகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும், அவைபோன்றோ அல்லது அவைகளை விடவும் உயர்வான அற்புதங்களை கொடுக்கப்பட்டேயல்லாதில்லை.

அண்ணலெம் பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் நூர் முஹம்மதியாவின் பொருட்டி னால் தான் ஏனைய நபிமார்கள் அனைவரும் அவர்களது உம்மத்தினர்கட்கு அற்புதங்களைக் காட்டினார்கள். எதார்த்தத்தில் அவர்கள் காட்டிய அற்புதங்கள் அனைத்தும் அண்ணல் கோமான் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் காட்டியவைகளே தான்.

இதே கருத்துப்பட இமாம் பூஸரி (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் புர்தா ஷரீபில் பாடியுள்ளார்கள்.

(பாகன்னபிய்யீன பீ கல்கின்................................)

''படைப்பிலும், குணத்திலும் எல்லா நபிமார்களைக் காணவும் மேலாகி விட்டார்கள். கல்வியிலும், ஈகையிலும் நபிமார்கள் இவர்கட்கு சமமாக மாட்டார்கள். நெருங்கவும் மாட்டார்கள். அவர்கள் அனைவரும் ரஸூலுல்லாஹ்வில் நின்றும் மாபெரும் சமுத்திரத்தில் நின்றும் ஓர் சிறங்கை அள்ளுதல் அளவிற்கு அல்லது நித்திய ஜீவிய நதியில் நின்றும் ஓர் துளி அளவிற்குத்தான் எடுத்திருக்கிறார்கள்''

இன்னும் பூஸரி இமாம் சொல்கிறார்கள்:

(வகுல்லு ஆயின் அதற்று ஸூலுல் கிராமுபிஹா.............)

''சங்கையான ரஸூல்மார்கள் கொண்டு வந்த அற்புதங்கள் அனைத்தையும் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் பேரொளி அவர்களுடன் சேர்ந்திருந்ததினால்தான் கொணர்ந்தனர். ஏனெனில் நிச்சயமாக நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் சிறப்பெனும் சூரியனாகவும், (மற்ற) நபிமார்கள் இருள்களில் மக்கட்கு தனது பிரகாசத்தை வெளிக்காட்டுகின்ற நட்சத்திரங்களாகவும் இருக்கின்றனர்.''

விண்மீன்கள் இராக்காலங்களில் பிரகாசிப்பது போல் முந்தைய நபிமார்கள் அவர்கள் தம் சமுதாயத்தினர்கட்கு வழி காட்டினார்கள். அவைகள் கதிரவன் காட்சியளித்ததும் மறை வதைப் போன்று, சூரியன் போன்ற உத்தமர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் உதயமானதும் நபிமார்களின் மார்க்கங்கள் மாற்றப்பட்டுவிட்டன என்பதை பூஸரி இமாம் (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் நயமாக உவமையிட்டு நவின்றுள்ளார்கள்.

ஆம்! உண்மையும் அதுவேதான். அல்லாஹ் சொல்கிறான்:- (கத்ஜா அக்கும் மினல்லாஹி நூறுன்-வகிதாபுன் முபீன்)

"உங்களுக்கு அல்லாஹ்விடமிருந்து நூரும் - ஒளியும், தெளிவான வேத நூலும் திடனாக வந்துவிட்டது"

(அல்குர்ஆன் 5 - 17)

இங்கு நூர்-ஒளி என்பது கொண்டு கருத்து நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தான்.

(தப்ஸீர் ஜலாலைன்)

பேரொளியாக பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தோன்றியதும் கவ்விக்கிடந்த காரிருல் கறைந்தது. அந்தகாரம் அகன்றது. அகக்கண் திறந்தது. மலிந்து கிடந்த அனாச்சாரம் மடிந்தது. மௌட்டீகம் மறைந்தது. சத்தியம் வென்றது. சன்மார்க்க நெறி நிலை நின்றது. (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்).

ஏனைய நபிமார்களுக்கு கொடுக்கப்பட்ட அத்துனை முஃஜிஸாத் அற்புதங்களையும், அந்தஸ்துகளையும் அவைகள் போன்றோ அல்லது அவைகளைவிட உயர்வான வைகளாகவோ நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்களும் கொடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை ஷிஹாபுத்தீன் அஹ்மத் ரமழி இமாம் (ரஹிமஹுல்லாஹ்) அவர்களும் சொன்னதை ஆதாரமாக வைத்து சிலவற்றை விரிவுபடுத்தித் தருகிறோம். அன்பர்கள் படித்து பயன் பெறுவீர்களாக!

# ஆதம் நபி அலைஹிஸ்ஸலாம்

சைய்யிதுனா ஆதம் நபி அவர்களை அல்லாஹுத்தஆலா தனது திருக்கரத்தால் படைத்தான்.

ஆனாலும் நமது நாயகத்தின் நெஞ்சைப் பிளக்க அவனே பொறுப்பேற்று அதில் ஈமானையும், ஹிக்மத்தையும், தத்துவத்தையும் படைத்தான். இது நபித்துவ படைப்பு, அது மனிதத்துவ படைப்பு.

மேலும் ஆதம் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை படைத்ததின் நோக்கமே அவர்கள் முதுகந்தண்டில் நாயகத்தைப் படைப்பது தான்.

மேலும் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இடைப் பொருளாக (வாஸிதாவாக)வும், முஹம்மது நபி (ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மூலப் பொருளாகவும் இருந்தார்கள்.

அமரர்களை ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஸுஜூது செய்யும் படி ஏவி கண்ணியப்படுத்தினான்.

இந்த ஏவலும், கண்ணியமும் எதார்த்தத்தில் நபிகள் கோமான் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்குத்தான். ஏனெனில் ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) அவர் கள் நெற்றியில் நூரே முஹம்மதிய்யா இலங்கிக் கொண்டே இருந்தது. இதற்காகவேதான் ஸுஜூது செய்யும்படி ஏவினான்.

(ஆதாரம்: தப்ஸீர் கபீர், ஷரஹுஹம்ஸிய்யா)

# இன்னல்லாஹ வமலாயிகதஹு.....

நிச்சயமாக அல்லாஹ்வும், அவனது அமரர்களும் இந்த நபி அவர்கள் மீது ஸலவாத்து சொல்கின்றனர். விசுவாசிகளே! நீங்களும் அவர்கள்மீது ஸலவாத்தும், ஸலாமும் சொல்லுங்கள் என்று அறிவித்ததினால் அல்லாஹ்வின் கண்ணியமும், அமரர்களின் கண்ணியமும், மனிதர்களின் கண்ணியமும் ஒருங்கே

கிடைக்கப் பெற்றுள்ளார்கள். இவ் வகையான கண்ணியமே ஸுஜூதை விடவும் உயர்வானது. ஏனெனில் ஸுஜூது அந்த சமயத்தோடு முடிந்துவிட்டது.

ஆனால் ஸலவாத்து எப்போதும் நித்தியமாக நீடித்திருக்கின்றது.

## அல்லம – ஆதமல் அஸ்மா அ–குல்லஹா:

"ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு அஸ்மாக் கள் (பெயர்கள்) அனைத்தையும் கற்றுக் கொடுத்தான்." (அல்குர்ஆன் 2-31) நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு அனைத்து அஸ்மாக்களையும், அதன் மூஸம் மயாத்து (பொருள்களின் தத்துவங்களையும்) கற்றுக் கொடுத்தான்.

முன்னோர்கள், பின்னோர்கள், இம்மை, மறுமை, ஆனவை, ஆகுபவை அனைத்தைப் பற்றியுள்ள இல்மு களையும் நபிகள் கோமான் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அறிந்திருக்கிறார்கள். (ஆதாரம்: ரூஹுல் பயான்)

## வஅல்லமக– மாலம் தகுன் தஃலமு – வகான பழ்லுல்லாஹி – அலைக்க அழீமா:

நீங்கள் அறியாதவற்றை உங்களுக்குக் கற்றுத் தந்தான். உங்கள் மீது அல்லாஹ்வின் வருசை பெரிதாகி விட்டது. (அல்குர்ஆன் 4-113) ஆகவே நாயகத்திற்கு தெரியாதது ஒன்றுமில்லை. அவர்களுக்கு கொடுக்கப்படாத கல்வி ஒன்றுமில்லை.

ஆதம் (அலைஹிஸ்ஸலாம்)அவர்கள் அபுல் பஷர்-மனுக்குல மாந்தருக்கு தந்தையாகத் திகழ்கின்றார்கள்.

ஆம்! எனினும் ஆன்மீகத் தந்தையாக விளங்குகின்ற வர்கள் நம் அருமை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தான்.

நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களே நவின்றுள்ளார்கள்:- அன-அபுல்-அர்வாஹி-வ-ஆதமு-அபுல்-பஷரி. நான் ஆன்மாக்களுக்குத் தந்தை, ஆதம் மனிதர்கட்கு தந்தை.

(நூல்:- ஜவாஹிருல் பிகார்)

# இத்ரீஸ் நபி அலைஹிஸ்ஸலாம்

அவர்களை நாம் உயரமான இடத்திற்கு (வானுலகத்திற்கு) உயர்த்தினோம். (அல்குர்ஆன் 19 : 57)

நமது நாயகத்தையும் ஏழு வானுலகத்திற்கும் அப்பாலான எவரும் நெருங்க முடியாத உன்னதமான உயர்ந்த இடத்திற்கு காப கௌஸைன் வரையும், அதை விடவும் நெருக்கமாகவும் விண்ணுலக பயணத்தின் போது உயர்த்தி உரையாடி இத்ரீஸ் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களைக் காண்வும் மேன்மை படுத்தியுள்ளான்.

# நூஹ் நபி அலைஹிஸ்ஸலாம்

"அவர்களையும், அவர்களுடன் இருந்தவர்களையும் (மூழ்குதலை விட்டும்) கப்பலில் ஈடேற்றமாக்கினோம். நமது திருஷ்டானங்களை பொய்யக்கினவர்களை (வெள்ளப் பிரளயத்தைக் கொண்டு) மூழ்கடித்தோம்.

(அல்குர்ஆன் 7:64)

ஆனால் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைப் பற்றியும், அவர்கள் உம்மத்தினர்கள் பற்றியும் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:-

(வமாகானல்லாஹு லியு அத்திபஹும்-வஅன்த - பீஹிம்)

"நீர் அவர்களில் இருக்கும்போது (உமது உம்மத் மார்களான) அவர்களை அல்லாஹ் (கொடிய பொது) வேதனை செய்பவனாக இல்லை." (அல்குர்ஆன் 8 - 33)

(எக்காலமும் உம்மத்மார்களுடனே ஹாழிராகவும், நாழிராகவும் இருக்கும் சாவா வாழ்வை பெற்ற சர்வ ரேகாயினாத் அஷ்ரபுல் கல்கு) அண்ணலெம்பெருமானார் அவர்களின் பொருட்டினால் அவர்களது உம்மத்தினர்கள் முன் சென்ற உம்மத்தினர்களைப் போன்று கல்மாரி பொழிதல், பூமிக்கடியில் சொரி வாங்குதல், பூண்டோடு அழிதல் போன்ற கொடிய பெரிய வேதனையை அல்லாஹ் செய்ய மாட்டான். (தப்ஸீர் ஸாவி)

ஆகவே நூஹ் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இருக்கவே அவர்களது இதர உம்மத்தினர்களை அழித்தது போல் நபிகள் நாயகம் அவர்களது உம்மத்தினர்களை அழிக்க மாட்டேன் என அல்லாஹ்வே கூறி நமது நாயகத்தை மேன்மைப்படுத்தி யுள்ளான்.

மேலும் நூஹ் நபி அவர்களும், அவர்களுடன் கப்பலில் இருந்தவர்களும் நபிகள் நாயகத்தின் பேரொளியின் பொருட்டி னால் தான் மூழ்குவதை விட்டும் ஈடேற்றமடைந்தார்கள்.

(வஸ்னயில் புல்க-பிஅஃ'யுனினா-வவஹ்யினா) (நூஹ் நபி அவர்களே!) கப்பலை நமது கண்காணிப்பைக் கொண்டும், நமது கட்டளையைக் கொண்டும் கட்டுவீராக!

(அல்குர்ஆன் 11 - 37)

உலகில் முதன்மையாகக் கப்பல் கட்டி நீரில் ஓட்டிய வர்கள் நூஹ் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள்.

ஆம்! இந்த நவயுகத்தில் மரம் நீரில் மிதப்பது விந்தையல்ல. இதை விடவும் அற்புதமானதை நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் செய்து காட்டினார்கள்.

நீரில் போட்டவுடன் தாழ்ந்து மூழ்கிவிடுகின்ற கல்லை நீரில் ஓட விட்டிருக்கிறார்கள். அதை பேசவும் வைத்திருக்கிறார்கள் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள்.

ஒரு சமயத்தில் ஓர் நீரோடையின் அருகாமையில் அண்ணலார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அமர்ந்திருந்தார்கள். அது சமயம் அபூஜஹ்லின் மகனார் இக்ரிமா

(ரலியல்லாஹு அன்ஹு) அவர்களும் அங்கு சென்று அமர்ந்து, "நீங்கள் உண்மையாளராக இருந்தால் அக்கரையில் இருக்கும் அதோ அக்கல்லை வரவழைத்து சாட்சி பகரச் சொல்லுங்கள்" என்று வினா தொடுத்தார்கள்.

உடனேயே உத்தமர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கை சமிக்ஞையால் ஆணையிட்டார்கள். அக்கல் உடனே இடம் பெயர்ந்து நீரில் நீந்தி திரு நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் திருச் சமூகம் வந்து, "நீர் உண்மையான இறைத் தூதர்தான்" என்று கையில் அமர்ந்து சாட்சி பகர்ந்தது.

(ஆதாரம்: ஹுஜ்ஜத்துலாஹி அலல் ஆலமீன்)

மரக்கலம் நீரில் மிதந்தது விந்தையல்ல! கல் நீரில் மிதந்து வருகை தந்து சாட்சி பகர்ந்தது பெரும் அற்புத மில்லையா? சிறப்பில்லையா?

நூஹ் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் மண்ணுலகில் நீரின் மீது பயணம் செய்தார்கள்.

ஆனால் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மிஃராஜின்போது காற்றில் விண் ணுலகப் பயணத்தை மேற்கொண்டுவிட்டு மறுபடியும் மக்கமாநகருக்கே வந்துள்ளார்கள். இப்பயணம் அப்பயணத் தைவிட பெரிய சாதனையன்றோ?

மேலும் அண்ணலாரின் அருமைத் தோழர்கள் பலர் தண்ணீர் மீது மரக்கலம் யாதுமின்றி கடந்து சென்ற வரலாறுகள் பல உண்டு.

அவற்றில் அஃலா இப்னு ஹழரமிய்யி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் வரலாறு ஒன்று.

இவர்களைத் தளபதியாகக் கொண்டு ஓர் படையினர் யுத்தம் செய்யச் செல்லும் வழியில் நீந்திக் கடக்க முடியாத மாபெரும் நதி குறுக்கிடுகின்றது. மரக்கலம் யாதும் இல்லை. புதிதாகச் செய்வதற்கும் நேரமில்லை. இறைவனிடம் இறைஞ்சிவிட்டு

இவர்களும்; இவர்களது காலாட்படையினரும், குதிரைப் படையினரும் நதியின்மேல் நடந்தனர். இவர்களது பாதங்களும், குதிரைகளின் குளம்புகளும் கொஞ்சம் கூட நனையாது பாலத்தின் மீது நடப்பது போன்று நதியைக் கடந்தனர்! சுப்ஹானல்லாஹ்!

மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களும், அவர்களது கூட்டத்தினர்களும் கடலைக் கடக்கும்போது கடலைப் பிளந்து திடலாக ஆக்கப்பட்டு கடலிலேயே நடந்து கடந்தனர். ஆனால் இவர்கள் நதி பிளக்கப்படாது நீரின் மீதே நடந்து சென்றது பெரிய அற்புதமன்றோ? பெருமானாரின் பெருமையை எடுத்துக் காட்டவில்லையா இது?

# இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம்

இவர்களுக்கு நும்ரூத்தின் நெருப்புக் குண்டம் இதமான பூஞ்சோலையாக ஆனது.

யாநாரு கூனி............. நெருப்பே! இப்றாஹீம் மீது இதமான குளிராக ஆகு! (அல்குர்ஆன் 21 - 69)

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களது நூர்-ஒளியின் பொருட்டினால் தான் இவர்கட்கு நெருப்புக் குண்டம் பூஞ்சோலையானது.

ஆயிரமாண்டுகள் வரை அணையாத பாரிஸ் நாட்டு நெருப்புக் குண்டம், அண்ணலார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அவனியில் அவதாரமானதும் அணைந்து விட்டது.

இது நபித்துவம் கிடைக்க நாற்பது ஆண்டுகட்கு முன் நடந்தது. அது நபியாக இருக்கும் போது ஏற்பட்டது. எனவே நபித்துவத்திற்கு முன்பே நடந்த அற்புதமே பெரிய அற்புதம்.

மேலும் மிஃராஜ் இரவில் நெருப்புக் கோளங்களையும் கடந்து தான் விண்ணுலகப் பயணத்தை மேற்கொண்டார்கள். அந்த நெருப்புக் கோளங்கள் அண்ணலார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு இதமாகவே தான் இருந்தன.

இன்னும் நபித் தோழர்களான அம்மாரு இப்னு யாஸிர், அபூமுஸ்லிமுல் கவ்லானி துவைப்பு இப்னு குலைபு (ரலியல் லாஹுஅன்ஹும்) ஆகியவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய தினால் பெரும் நெருப்பில் தள்ளப்பட்டார்கள். ரஸூலுல் லாஹ் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் பொருட்டி னால் நெருப்பு கரிக்காமல் இதமான பூங்காவாக ஆனது. இதுவும் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் சிறப்பை எடுத்துக் காட்டுகின்றது.

மேலும் பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம்) அவர்கள் மாபெரும் அழிவுகளை விளைவித்துவிடும் "யுத்த நெருப்பை" அணைத்திருக்கிறார்கள்.

இது குறித்து இறைவன் குர்ஆனில் சொல்கிறான்:- (குல்லமா அவ்கதூ நாரன் லில்ஹர்பி அத்ப அஹல்லாஹு)

அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடன் அவர்கள் (பகைவர்கள்) யுத்த நெருப்பை மூட்டும் போதெல்லாம் அதை அல்லாஹ் (அண்ணலாருக் காக) அணைத்து விடுவான். (அல்குர்ஆன் 5:64)

இப்ராஹீம் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் "குல்லத்" எனும் பதவியை கொடுக்கப்பட்டதினால் "கலீலுல் லாஹ்" என்ற பெயர் பெற்றார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் "குல்லத்" எனும் பதவியை விட பண்மடங்கு உயர் வான "மஹப்பத்" எனும் பதவியை அருளப்பட்டு "ஹபீபுல் லாஹ்" எனப் பெயர் பெற்றிருக்கிறார்கள். (குல்லத், மஹப்பத் இவை இரண்டிற்குமிடையிலான பாகுபாடினை பின் விவர மாக விளக்குவோம். இன்ஷா அல்லாஹ்)

அல்லாஹுத்தஆலாவின் முதல் ஆலயமான கஃபாவை இப்றாஹீம் நபி (அலைஹிஸ்ஸலாம்) தனது கரத்தால் கட்டினார்கள்.

ஆம்! நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் நபித்துவத்திற்கு முன்பு கஃபா பரிபாலனம் செய்யப்படும்போது கற்களை சுமந்து கொடுத்திருக்கிறார்கள்.

''ஹஜருல் அஸ்வதை'' வைக்கும் விஷயத்தில், போர் மூண்டுவிடும் அளவிற்குள்ள மாபெரும் சர்ச்சையை சுமூகமாகத் தீர்த்து, தங்களது திருக்கரத்தாலேயே, இன்று ''ஹஜருல் அஸ்வத்'' எவ்விடத்தில் காட்சியளிக்கின்றதோ அவ் விடத்திலேயே வைத்திருக்கிறார்கள்.

எனவே, கஃபாவை கட்டுமானம் செய்யும் விஷயுத்தில் பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு பங்குண்டென்பது வெள்ளிடைமலை.

இப்றாஹீம் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் தன்னந்தனியாகவே இருந்து எவரும் அறியாவண்ணம் கற் சிலைகளை உடைத்தெரிந்தார்கள்.

நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் மக்காவை வெற்றி வாகை சூடிய போது, கஃபத்துல்லாஹ்வில் மண்டிக்கிடந்த அசுசியங்களான விக்கிரகங்களை பகிரங்கமாகவே, ''குல்ஜாஅல் ஹக்கு வஸஹகல் பாத்தில்........'' சத்தியம் வந்து விட்டது. அசத்தியம் அழிந்து விட்டது எனும் திருமறை வசனம் ஓதிக் கொண்டு உடைத்தெறிந்து பரிசுத்தமாக்கினார்கள். என்னே இவர்கள் சாதனை? சிறப்பு?

## இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம்

இவர்கள் தங்கள் தந்தை இப்றாஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்கள் தன்னை இறைவழியில் அறுத்து பலியிட தயாரான போது, அதை ஏற்று பொறுமையை மேற் கொண்டார்கள். என்னே அவர்களின் பொறுமை!

இதை போன்று நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் மூலம் நெஞ்சை பிளக்கப்படும்போது பொறுமையை மேற்கொண்

டார்கள். இவர்களின் நெஞ்சோ பிளக்கப்பட்டே விட்டது. ஆனால் இஸ்மாயீல் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் பலியிடப்படாது பாதுகாக்கப்பட்டு அதற்குப் பகரமாக ஆட்டை பலியிடப்பட்டது.

## ஹூது நபி அலைஹிஸ்ஸலாம்

இவர்களுக்கு உதவியாக புயல் காற்று அனுப்பப்பட்டு அவர்களது சமுதாயத்தினர் அழிக்கப்பட்டனர்.

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றுள்ளார்கள்:-

"நான் தென்றல் காற்றின் மூலம் உதவி செய்யப்பட்டுள்ளேன். (ஹூது நபியின் கூட்டமான) ஆத் கூட்டத்தினர் மேற்கத்திய (புயல்) காற்றின் மூலம் நாசமடைந்தனர்.

(அல்ஹதீது:- புகாரி, முஸ்லிம்)

## ஸாலிஹ் நபி அலைஹிஸ்ஸலாம்

இவர்களுக்கு பாறைக் கல்லினுள்ளிருந்து ஒட்டகம் வெளியில் வந்து அவர்களுடன் உரையாடியது.

நம் நாயகம் அவர்களுக்கும் திமிர்கொண்ட எத்தனையோ ஒட்டகங்கள் பணிந்து சாஷ்டாங்கம் செய்து உரையாடி யிருக்கின்றன. (ஆதாரம்:- அஹ்மது, நஸயி)

## யஃகூப் நபி அலைஹிஸ்ஸலாம்

இவர்களிடம் யூசுப் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர் களின் சகோதரர்கள் யூசுப் நபியை ஓநாய் தின்று விட்டது என்று சொன்ன போது தமது அன்பு மகனின் பிரிவால் மிக துக்கமுற்று ஓநாயை அழைத்து, என் அன்பு மகன் யூசுபை நீ தின்றாயா? என விசாரித்தார்கள். ஓநாய் இல்லை என மறுமொழி கொடுத்தது.

(கஸாயிஹுல் குப்ரா)

அதன் பின் அருமை மகனின் கதி என்ன ஆனதோ என நினைத்தும், மகனின் பிரிவாலும் நீண்ட நெடும் துயரத் தோடு

அழுது அழுது இரு கண்களின் பார்வை இழந்து விடும் அளவிற்காகி பொறுமையை மேற்கொண்டார்கள்.

இது போன்று நமது நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் ஒநாயோடு உரையாடிய வரலாறுகள் பல உண்டு.

மேலும் தாங்களும், தாங்கள் அருமை மகனார் இப்றாஹீமை இளம் பருவத்திலேயே இழந்து கவலைக்குள்ளானார்கள். ஏனெனில் மனம் சாந்தி பெற வேறு ஆன்மாக்கள் இல்லையே. கிடைக்கப் பெற்ற அருமை மகனும் மீளாப் பிரிவில் அல்லவா சென்று விட்டான்?

ஆனால் யஃகூப் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர் களுக்கோ மனம் சாந்தி பெற வேறு பல ஆண்மக்கள் இருந்தனர். யூசுப் நபியையும் மீளாப்பிரிவில் ஆக்கி விடாமல் திரும்பவும் கொடுக்கப்பட்டு விட்டார்கள்.

பெருமானாரின் பொறுமையே பொறுமை! அதற்கு நிகர் உண்டோ?

## யூசுப் நபி அலைஹிஸ்ஸலாம்

இவர்கள் பேரழகாக இருந்தார்கள். இதனால் மிஸ்ரு நாட்டு மங்கையர்கள் இவர்களின் பேரழகைப் பார்த்ததும் அதனால் ஈர்க்கப்பட்டு "இவர் மனிதரல்ல, இவர் புனிதமான அமரராக அன்றி வேறில்லை" என்று சொல்லி தங்கள் (கரங் களிலிருந்த கனிகளை வெட்டுவதற்குப் பதிலாக) கை விரல் களை கத்தரித்துக் கொண்டார்கள். (அல்குர்ஆன் 12:31)

யூசுப் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு கொடுக்கப் பட்ட பேரழகு பூராவும் உலகிலுள்ள அழகுகளில் பாதி அளவு தான். ஆனால் முழு அழகை பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் பெற்றிருந்தார்கள். அதனால் அரபு நாட்டு ஆடவர்கள் தங்கள் தலைகளை அவர்களுக்காக இறைவழியில் பலியிட்டனர். (சுப்ஹானல்லாஹ்)

மாதிஹுர்ரசூல் சதக்கத்துல்லாஹ் அப்பா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் வித்ரிய்யாவில் சொன்னார்கள்:-

"லியூசுப ஷத்றுல் ஹுஸ்னி மின்ஹு தகஸ்ஸமா.........." நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடமிருந்தே தான் பாதி அழகு யூசுப் நபிக்கு பங்கீ டானது. நாயகமோ முழு அழகைக் கொண்டிருக்கிறார்கள். அதனால் இவர்கள் தலைமையானவர்ளாகவும், உயர்வான வர்களாகவும் ஆகிவிட்டார்கள்.

எனவே தான் அலி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் "நபிகள் நாயகத்தைப் போன்று அவர்களுக்கு முன்னும், பின்னும் எவரையும் கண்டதில்லை" என்று கூறினார்கள்.

அண்ணலெம் பெருமானாரின் அவைப்புலவர் ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் பாடுகிறார்கள்:-

வஅஜ்மலுமின்க-லம்-தரகத்து அய்னி. (நாயகமே) உங்களைவிட எழில் மிக்க எவரையும் என் கண் கண்ட தில்லை. (இவர்கள் கண் காணாவிட்டால் வேறு கண்கள் கண்டிருக்குமோ என்ற ஐயத்தை அடுத்த அடியில் நிவர்த்தி பண்ணுகிறார்கள்!) வ அக்மலு மின்க-லம்-தலிதின்னிஸாவு. உங்களைவிட சம்பூரணமானவர்களை எந்தப் பெண்மணியும் ஈன்றெடுத்த தில்லை. நீங்கள் எல்லாக் குறைகளையும் விட்டு நீக்கப்பட்டு படைக்கப்பட்டுள்ளீர்கள். (அல்லாஹ் தான் நாடிய கோலத்தில் மக்களைப் படைக்கிறான் . ஆனால்) நீங்கள் நாடிய பிரகாரம் படைக்கப்பட்டதைப் போன்று படைக்கப்பட்டுள்ளீர்கள்.

இப்பாடலை அன்னை ஆயிஷா நாயகி (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் பாடியதாகவும் வந்துள்ளது.

மேலும் ஜுரைர் இப்னு அப்துல்லாஹ் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள், "இறைவன் மீது ஆணையாக நாயகத் திருமேனியின் முகத்தை பரிபூரண சந்திரனைப் போன்று - இல்லை. அதை விடவும் அழகானதாகக் கண்டேன் என்று நவின்றுள்ளார்கள்.

சுபுஹான மௌலிது ஷரீபில், (இன்ன-பைத்தன்-அன்த-ஸாகினுஹூ..............) "நீங்கள் குடிகொண்டிருக்கும் மனைக்கு ஒளிவிளக்குகள் தேவையில்லை! ஜனங்கள் ஆதாரங்களைக் கொண்டு வரும் (கியாமத்து) நாளில் உங்களது சுடர்விடும் திருமுகமே எங்களது ஹுஜ்ஜத் - ஆதாரம்" என்று வந்துள்ளது.

யூசுப் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் கனவுகட்கு பலாபலன் கூறும் ஞானத்தை கொடுக்கப்பட்டிருந்தார்கள்.

ஆம்! அவர்கள் கூறிய கனவின் பலன்கள் மூன்று மட்டுமே தான் குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. ஆனால் நாயகம் (ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறிய கனவுகளின் பலன்கள் வரையறுத்துக் கூற முடியாத அளவில் காணக் கிடக்கின்றன.

யூசுப் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் தங்கள் தாய், தந்தையர்களையும், தாயகத்தையும் பிரிந்து வாழ்வதில் சோதிக்கப்பட்டார்கள்.

நம் அருமை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் இளம் பருவத்திலேயே தாய், தந்தையை இழந்தவர்களாக வாழ்ந்து, பின்பு தாயகத்தையும், உற்றார், உறவினர்களையும் பிரிந்து (மதினாவுக்கு ஹிஜ்ரத் சென்று) வாழ்ந்திருக்கிறார்கள்.

# தாவூது நபி அலைஹிஸ்ஸலாம்

இவர்களுக்கு இரும்பு உலோகத்தை வசப்படுத்திக் கொடுக்கப்பட்டிருந்தது. இவர்களின் திருக்கரங்கள் இரும்பின் மீது பட்டதும் குழைத்த மாவு-மெழுகு போன்று இளகிவிடும். நாடிய விதமாய்போர் அணிகலன்களை செய்வார்கள். மலைகளும், பறவைகளும் அவர்கட்கு இசைந்ததாக இருந்து தஸ்பீஹ் (இறைத் துதியை) செய்தன.

இது குறித்து அல்லாஹுத்தஆலா குர்ஆனில் கூறுகிறான்:-

“நிச்சயமாக நாம் தாவுதுக்கு நம்மில் நின்றுமே மேன்மையை (நுபுவ்வத்தையும், ஸபூர் வேதத்தையும்) கொடுத்தோம். மலைகளே! பறவைகளே! அவருடன் (தஸ்பீஹ் செய்து கொண்டு) மீளுங்கள் (என்றும் சொன்னோம்) அவருக்கு இரும்பை இளக்கிக் கொடுத்தோம். (அது குழைந்த மாவு போன்று அவர் கையில் ஆகிவிடும்.) பெரிய பெரிய உருக்கு சட்டைகளை தேவைக்கு தக்கவாறு செய்யும் (என்றும் சொன்னோம்). அல்குர்ஆன் 34:10

இது போன்று நமது நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மிஃராஜ் சென்ற சமயம் புனித பைத்துல் முகத்தஸின் பாறைக்கல் குழைந்த மாவைப் போன்று ஆகி அதில் தங்கள் கரத்தால் துவாரமிட்டு “புறாக்” வாகனத்தைக் கட்டினார்கள். (ஆதாரம்:- அபூநுஅய்ம்)

நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம்) அவர்களின் திருக்கரத்தில் கற்கள் தஸ்பீஹ் செய்தன. அக்கல்லை அடுத்தவர்கள் கையில் வைத்தாலும் அங்கும் தஸ்பீஹ் செய்யும். அவர்களும் அந்த தஸ்பீஹைக் கேட்பார்கள். இவ்வாறு சர்வ வஸ்துக்களின் தஸ்பீஹை கேட்பவர்களாக இருந்தார்கள்.

இவ்வாறே பறவைகளும், ஒட்டகம், ஓநாய், சிங்கம் மற்றும் ஜீவராசிகள் அனைத்தும் இவர்களுக்கு வசப்பட்டுக் கிடந்தன.

நாயகத்தின் திருக்கரம் காய்ந்துபோன மரத்தின்மேல் பட்டுவிட்டால் உடனே பசுமையாகி இலைகள் தோன்றி பூ பூத்து காய் காய்த்து கனிகளை நல்கிவிடும். இது போன்று சொரி பிடித்த ஆட்டின் மீது பட்டு விட்டால் உடனே சுகமாகி அதிகமான பாலை கொடுத்து விடும். சுப்ஹானல்லாஹ்! இவர்களின் திருக்கரத்திற்கு எவ்வளவு பெரிய மகிமை!

தாவூது நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் அழகான குரல் உடையவர்களாக இருந்தார்கள். ஸபூர் வேதத்தை ஓத ஆரம்பித்தால் மிக இனிமையாக இருக்கும்.

ஆம்! அது போன்றே நம் அருமை நபி நாயகம் அவர்களும் அழகான - இனிமையான குரல் உடையவர்களாக இருந்தார்கள். குர்ஆனை ஓத ஆரம்பித்து விடுவார்களேயானால் அசையுறாத கல்

நெஞ்சும் இளகிவிடும். அதனாலேயே காதுகளில் காபிர்கள் பஞ்சை வைத்துக் கொண்டார்கள்.

ஹழ்ரத் அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் சொல்கிறார்கள்:-

“நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நமக்கு மத்தியில் முகம் வசீகரமானவர்களாகவும், குரல் அழகானவர்களாகவும் இருந்தார்கள்” (திர்மிதீ)

# சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம்

உலகம் முழுவதும் ஆட்சி புரியும் பேரரசாங்கத்தை கொடுக்கப்பட்டிருந்தார்கள்.

“இறைவா! என்னை மன்னிப்பாயாக! எனக்குப் பின்னால் எவருக்கும் கிடைக்கப் பெறாத அரசாங்கத்தை எனக்கு அருள்வாயாக! என்று (சுலைமான் நபி) கேட்டார்கள்”

(அல்குர்ஆன் 38:35)

இவர்களின் இந்த பிரார்த்தனை அங்கீகரிக்கப்பட்டு விட்டதினால் இவர்கட்குப் பின் எவருக்கும் அவ்வளவு பெரிய பரந்து விரிந்த ஆட்சி கொடுக்கப்படவில்லை.

எனினும் நமது நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடம் தாங்கள் நபியாகவும், அரசராகவும் இருக்கிறீர்களா? அல்லது நபியாகவும், அடியாராகவும் இருக்கிறீர்களா? என்று விருப்பம் வேண்டப்பட்டது. இதற்கு பணிவையே விரும்பும் பயகம்பர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நான் நபியாகவும், அடியாராகவும் இருப்பதையே விரும்புகிறேன் என்று பதிலுரைத்தார்கள்.

எனவே தான் அல்லாஹுத்தஆலா தானே விரும்பி அண்ணல் நபிக்கு கஜாயினுல் அர்ழி (பூலோக பொக்கிஷம்) அனைத்தையும் கொடுத்தான்.

“வலசௌப-யுஃதீக-ரப்புக-பதர்ழா (நபியே) நீர் பொருத் தப்படும் அளவிற்கு உமக்கு உமது இரட்சகன் தருவான்” என்றும் அறிவித்தான்.

வேண்டிப் பெற்ற அரசாங்கத்திற்கும், விருப்பமுடன் கொடுக்கப்பட்ட ஆட்சிக்கும் வேறுபாடில்லையா என்ன?

சுலைமான் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள்பூமியின் எக்கோணத்திற்காவது செல்ல நாடினால் அவ்விடத்திற்கு அவர்கள் அமர்ந்து இருக்கும் சிம்மாசனத்தை காற்று தூக்கிக் கொண்டு செல்லும். காலையில் ஒரு மாத தொலை தூரத்திற்கு கொண்டு செல்லும், மாலையில் அந்த தொலை தூரத்திற்கு திருப்பிக் கொண்டு விடும்.

ஆனால் நபிகள் நாயகத்திற்கோ காற்றை விடவும்............ இல்லை, மின்னலை விடவும் அதிவேகமாகச் செல்லும் "புறாக்" வாகனத்தை மிஃராஜ் இரவில் கொடுக்கப்பட்டு அவர்களைக் கீழ் உலகிலிருந்து மேலுலகத்திற்கு அதிவிரை வில் கொண்டு சென்று திரும்பவும் அங்கிருந்து இங்கு கொண்டு வரப்பட்டார்கள்.

மேலும் சுலைமான் நபிக்கு காற்றை பூமியின் கோணத் திற்குத் தூக்கிச் செல்வதற்கு வசப்படுத்திக் கொடுக்கப் பட்டிருந்து.

ஆனால் நமது நபி நாயகத்திற்கு பூமியே சுருட்டிக் கொடுக்கப்பட்டிருந்தது. எனவே தான் அவர்கள் உதயகிரி அஸ்தகிரியைப் பார்த்தார்கள். பூமியின் பக்கம் எவர் விரைந்து செல்கிறார் என்பதையும், பூமி எவரின் பக்கம் விரைந்து செல்கிறது என்பதையெல்லாம் பிரித்துணர்ந்தார்கள். மற்று மொரு ஹதீஸில் சொல்கிறார்கள்:- துன்யா இவ்வுலகம் எனக்கு உயர்த்திக் காட்டப்பட்டது. எனவே எனது உள்ளங் கையை பார்ப்பது போன்று துன்யாவையும், அதில் கியாமத் நாள்வரை ஏற்படுகின் றவைகளையும் நான் பார்க்கிறேன் என்று.

(ஆதாரம்: மவாஹிபுல்ல துன்னிய்யா - தப்ஸீர் ஸாவி)

சுலைமான் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களது பட்டாளங்களில் ஜின்களையும் சேர்க்கப்பட்டுள்ளது. "சுலைமான்" நபிக்கு ஜின்களில் நின்றும் அவர்களது பட்டாளம் சேகரம் செய்யப்பட்டது. (27:7) என்று குர்ஆனும் பறை சாற்றுகின்றது.

ஆம்! ஜின்களை விடவும் உயர்வானவர்களான அமரர் களை பத்ரு யுத்தகளத்திற்கு அனுப்பி நாயகத்தின் பட்டாளங் களாக அல்லாஹ் ஆக்கியிருக்கிறான்.

மேலும் ஜின்களும், ஷைத்தான்களும் சுலைமான் நபியின் ஆட்சி, அதிகாரத்திற்கு பயந்து, அடங்கிப் போய் இருந்தன. அதனால் அவர்கள் பணித்திடும் வேலைகளை நிர்பந்தமாக செய்து கொண்டிருந்தன. அவர்கள் மரணமான பின் அடங்கா பிசாசுகளாக மாறின.

ஆனால் நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கோ ஜின்கள் அன்புடனும், ஆசையுடனும் அடிபணிந்து ஈமான் கொண்டிருந்தன. இதைப் போன்று ஷைத்தான்களின் தந்தையான இப்லீஸ் (லஃனத் துல்லாஹி அலைஹி) ஒரு சமயம் ரஸூல் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் தொழுகையில் குறுக்கிட்ட போது அவனைப் பிடித்து மதீனா பள்ளியின் தூணில் கட்டி வைத்து பின் சுலைமான் நபியின் பிரார்த்தனை நினைவுக்கு வந்தபொழுது அவிழ்த்து விட்டிருக்கிறார்கள்.

பறவைகள், காட்டு விலங்குகள் பாஷைகளை சுலைமான் நபி தெரிந்ததினால் அவைகளோடு உரையாடு வார்கள்.

ஆம்! அண்ணலெம்பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் அவ்வாறு அவைகளோடு உரையாடிய வரலாறுகள் அனந்தமுண்டு.

பறவைகள், காட்டுவிலங்குகளான ஜீவவர்க்கமென்ன, தாதுவர்க்கங்கனான கல் கறடுகள், மலைகள் பேசியிருக் கின்றன. நஞ்சு ஊட்டப்பட்டு சமைக்கப்பட்ட ஆட்டின் கறித்துண்டு பேசியிருக்கிறது.

## அய்யூப் நபி அலைஹிஸ்ஸலாம்

பல சோதனையிலும் பொறுமையினால் சாதனை செய் தார்கள். ஆம்! அண்ணலெம்பெருமானார் (ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம்) அவர்களும் சொல்லடி, கல்லடி, பசி, பட்டினியில் பொறுமையை மேற்கொண்டு உடல் வலுவா லும், உள்ளத்து வலுவாலும் எண்ணற்ற சாதனைகளை சாதித்திருக் கிறார்கள்.

# மூஸா நபி அலைஹிஸ்ஸலாம்

இவர்களது அஸா - கம்பு விரைந்து செல்லும் பாம்பாக மாறும்படியான அற்புதத்தை கொடுக்கப்பட்டிருந்தார்கள்.

கம்பு பாம்பாக அவசியமானபோது மாறும். ஒன்றும் பேசாமலே ஓடும்.

ஆனால் நமது நபி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு பேரீத்த மரத்தின் ஒரு கம்பு, அதை இவர்கள் பெரிய மெம்பர் படி செய்து பிரித்த போது அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் பொன்மேனி நம்மீது பட்டுக் கொண்டிருந்த பாக்கியம் இனி நமக்கில்லையே என (மனிதர்களைப் போன்று) தேம்பித் தேம்பி அழுதிருக்கிறது.

இமாம் ராஸி அவர்கள் அறிவிக்கிறார்கள்:-

"அபுஜஹ்லு என்பான் நாயகத் திருமேனியை கல்லால் அடிக்க நாடிச் செல்லும் போதெல்லாம் நாயகத்தின் இரு தோள்புஜங்கள் மீது இரு பாம்புகள் இருக்கக் கண்டு கல்லால் அடிக்காமல் அரண்டவனாக திரும்புவான்" என்று.

மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் மற்று மொரு, அற்புதம் :-

அவர்கள் தங்கள் கையை சட்டைப் பைக்குள் விட்டு எடுத்தால் வெண்மையான ஒளிக்கதிர் மிக்கதாகக் காணப்படும். பார்ப்போரின் கண்களை மருளச் செய்யும் அளவிற்கு ஒளியாக இருக்கும்.

நமது நாயகத்திருமேனியோ பூரண ஒளி பிம்பமாகவே ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் தொடுத்து அப்துல் லாஹ் நாயகம்

அவர்கள் வரை தகப்பன்மார்கள் முதுகந்தண்டு களிலும், தாய்மார்கள் கற்பக்குவளறைகளிலும் இருந்து வந்திருக்கிறார்கள்.

மேலும் நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இருள் கப்பி மழை பொழிந்து காரிருள் மிக்க இரவில் தன்னுடன் இஷாத் தொழுகையை நிறைவேற்றி விட்டு வீட்டிற்குப் போக வழி தெரியாது கதிகலங்கி நின்ற கதாதா இப்னு நுஃமான் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்க ளுக்கு பேரீத்த மரத்தின் பாளையைக் கொடுத்து "இது கொண்டு நடவும். உமக்கு முன்னால் பத்து பேருக்கும், பின்னால் பத்து பேருக்கும் ஒளி தரும்" என்று சொன்னார்கள். அது போன்றே அந்த உத்தம ஸஹாபி வீடு சென்றடையும் வரை பிரகாசித்திருக்கிறது.

(ஆதாரம்:- அபூநுஐம், பதாவா ரமலி)

இது போன்றே ஸஹாபாக்களான உப்பாதுப்னு பிஷ்று (ரலியல்லாஹு அன்ஹு), உஸைதுப்னு ஹழீர் (ரலியல் லாஹு அன்ஹு) ஆகியோர்கள் ஓர் இரவு நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் திருச் சன்னிதானத்தில் வெகு நேரம் உரையாடிக் கொண்டிருந்து விட்டு இருவரும் ஒருமித்து வீடு திரும்பும்போது காரிருள் காரணத்தால் வழி புரியாமல் இருந்தது. இருவரின் கைகளி லிருந்த அஸா - கம்புகளில ஒன்று பிரகாசிக்க ஆரம்பித்தது. கொஞ்ச தூரம் ஒருமித்தவர்களாக அந்த ஒளியின் துணை கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். இருவரும் வழிகளில் பிரிந்ததும் மற்றவரின் கையில் இருந்த அஸாவும் ஒளி கொடுக்க ஆரம்பித்து விட்டது. ஒவ்வொருவரும் தமது அஸாவின் ஒளியினால் வீடு சென்றடைந்தார்கள். (பைஹகீ ஹாகிம்)

ஹம்ஸத்துல் அஸ்லமி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:-

நாங்கள் நாயகத் திருமேனி ரஸூலே அக்ரம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடன் ஒரு பிரயாணத்தில் சென்று கொண்டிருக்கும்போது இருள் கப்பி இருந்தது. நாங்கள் ஆங்காங்கே பிரிந்து விட்டோம். இந்நேரத்தில் எனது கைவிரல்

பிரகாசிக்க ஆரம்பித்துவிட்டது. என்னுடன் இருந்த பிரயாணிகள் தங்கள் தங்கள் சாமான்களை எல்லாம் எடுத்துக் கொள்ளும் அளவிற்கு பிரகாசித்துக் கொண் டிருந்தது.

(புஹாரி, அபூநுஜம் பைஹகீ)

நபி மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு கடல் பிளந்து வழி கொடுத்தது.

நம் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம்) அவர்களுக்கு சந்திரன் பிளந்து கொடுக்கப்பட்டது. அஸ்த்தமித்த சூரியன் திருப்பிக் கொடுக்கப்பட்டது.

மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் மண்ணுலகில் வல்லமையைக் காட்டினார்கள். நம் நாயகம் விண்ணுலகில் தம் வல்லமையைக் காட்டியுள்ளார்கள். இவ்விரண்டிற்கும் இடையிலான பாகுபாடு வெள்ளிடைமலை.

இப்னுல் மூஸா (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள், இப்னுல் ஹபீப் (ரஹிமஹுல்லாஹ) அவர்கள் சொன்னதாகக் கூறுகிறார்கள்:-

"வானத்திற்கும், பூமிக்கும் இடையில் மாபெரும் சமுத் திரம் இருக்கின்றது. அதற்கு "மக்பூப்" என்று பெயர். திடலை சூழ்ந்திருக்கும் இக்கடலை அத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அக்கடலுக்கு இக்கடல் அனைத்தும் ஒரு சொட்டு நீருக்கே சமம்".

இதன் அடிப்படையில் பார்த்தால் நமது நாயகத்திற்கும் மிஃராஜ் இரவில் "மக்பூப்" எனும் மாபெரும் சமுத்திரம் பிளந்து வழி கொடுத்திருக்கிறது என்றும், மூஸா நபி (அலைஹிஸ் ஸலாம்) அவர்களுக்கு கடல் பிளந்து வழி கொடுத்ததைவிட பன் மடங்கு நமது நபிக்கே வழி கொடுத்திருக்கிறது என்றும் தெளிவாகின்றது.

மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் பிரார்த்தனை (துஆ) அங்கீகரிக்கப்பட்டவர்களாக இருந்தார்கள். நமது நபி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் துஆ அங்கீகரிக்கப்பட்டவர் மட்டுமென்ன! இவர்களின் விருப்பத்திற்கே அல்லாஹ் ஒருமித்திருக்கிறான்.

உர்து கவிஞர் ஒருவர் சொல்கிறார்:-

"ஈருலகமும் இறையோனின் விருப்பத்தை நாடி நிற்கின்றது. ஆனால் இறையோன் ஈருலக இரட்சகர் ஏந்தல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் விருப்பத்தை நாடி நிற்கிறான்".

ஆம்! "வலஸவ்ப-யுஃதீக்க-ரப்புக-பதர்ழா - நீர் பொருந்திக் கொள்ளும் அளவு உமக்கு உமது இரட்சகன் தருவான்" என்ற திருமறை வசனம் இதற்கு ஆதாரமாகும்.

மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்குக் கல்லில் இருந்து தண்ணீர் ஒளித்தோடிற்று. அதை 12 கிளைஞர்கள் அருந்தினார்கள்.

அண்ணல் பெருமகனார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு அவர்கள் தம் கைவிரல்களுக்கிடையில் இருந்து தண்ணீர் ஒலித்தோடிற்று. அதை 1500 படை வீரர்கள் குடித்து, குளித்து மகிழ்ந்தார்கள்.

கல், மண்ணினத்தைச் சார்ந்தது. அதில் எத்தனையோ பாறைக்கற்கள் வெடித்து ஊற்றெடுத்து ஆறாக பெருக்கெடுதது ஓடுகின்றன. ஆனால் மாமிச பிண்டத்தில் ஊற்றெடுத்து ஓடுவது விந்தையிலும் விந்தையாகும். இது எங்கள் அருமை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைத் தவிர்த்து வேறு எவருக்கும் ஏற்படவில்லை.

மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இறைவனோடு வசனிக்கும் பாக்கியத்தை தூர்சீனா மலையில் பெற்றார்கள்.

ஆனால் அருமை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கோ புண்ணியம் பூத்துக் குலுங்கிய மிஃராஜ் இரவில் ஏழு வானத்திற்கும், ஸிராத்துல் முன்தஹாவிற்கும், இன்னும் எத்தனையோ ஒளித்திரைக்கும் அப்பால் வசனிக்கும் பாக்கியம் மட்டுமின்றி இறைவனோடு நேருக்கு நேராக இரு கண்களால் பார்க்கும் பாக்கியமும், மிக சமீபமாக நெருங்கும் பாக்கியமும், இன்னும் விஷேசமான பல பாக்கியங்களும் அருளப்பட்டன.

# ஹாரூன் நபி அலைஹிஸ்ஸலாம்

அவர்கள் நாவன்மையைக் கொடுக்கப்பட்டிருந்தார்கள்.

நமது நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் நாவன்மையை அருளப்பட்டு மனிதர்களின் அறிவுக்கு ஏற்றவாறு, வந்திருப்பவர்களின் சிந்தனைக்குத் தக்கவாறு, உள்ளத்தின் அடித்தளத்தில் படியும் அளவிற்கு, சொல் இலக்கண, இலக்கிய அலங்காரத்துடன் கருத்துச் செறிவான வட்டுருக்கத்துடனும் உரையாடியிருக்கிறார்கள். இதற்கு அவர்கள் பொன்மொழிகளே தக்க சான்றாகும்.

எல்லா அம்சமும் ஒருங்கே பெற்ற உலகப் பொது வேத நூலாய், தித்திக்கும் திருமறையாய், உடல். உளத்துப் பிணி நிவாரணியாய் திருக்குர்ஆன் நம் நபிக்கல்லாமல் வேறு எவருக்கும் அருளப்படவில்லையே! அம்மறைக்கும், அதை அருளியவனுக்கும் நிகரில்லை. அது போன்று அதைப் பெற்றவர்களுக்கும் நிகர் இல்லை.

# ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம்

பிறவிக் குருடர்கள், வெண்குஷ்டரோகிகள் மற்றும் பெரும் வியாதியஸ்தர்களைக் குணப்படுத்தியும், மரணித்தவர்களை உயிர்ப்பித்து எழுப்பியும் இருக்கிறார்கள்.

ஈஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை பனீ இஸ்ராயீல் பக்கம் தூதுவராக அல்லாஹ் அனுப்பிய போது ஈஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் சொன்னார்கள்.

நான் உங்கள் இரட்சகனிடமிருந்து (நான் உண்மையாளன் என்பதற்கு) அத்தாட்சி கொண்டு வந்துள்ளேன். (அந்த அத்தாட்சி) நான் உங்களுக்கு மண்ணிலிருந்து பறவையின் கோலத்தைப் படைத்து அதில் (வாயால்) ஊதுவேன். உடன் அல்லாஹ்வின் உத்தரவு கொண்டு பறவையாக ஆகும். பிறவிக் குருடர்களையும், வெண்குஷ்டரோகிகளையும் சுகப் படுத்துவேன். அல்லாஹ்வின் உத்தரவு கொண்டு மரணித்தவர்களையும்

உயிர்ப்பிப்பேன். நீங்கள் தின்றதையும், உங்களது வீடுகளில் மறைத்து வைத்திருப்பவற்றையும் நான் அறிவிப்பேன். (அல்குர்ஆன் 3:49)

இவ்வாறே நமது நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் வீழ்ந்து விட்ட கண்ணை மீட்டிப் பார்வை கொடுத்துள்ளார்கள்.

முஆதுப்னு அப்ராவு (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் மனைவி வெண்குஷ்டமுடையவர்களாக இருந் தார்கள். நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் சமூகம் இது குறித்து முறையீடு செய்த போது காருண்ய நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அம்மாது மீது (அஸா) கம்பைக் கொண்டு தடவிய தும் அல்லாஹ் அவர்களின் குஷ்டரோகத்தைப் போக்கினான். இது விபரத்தை இமாம் ராஸி (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இமாம் பைஹகீ (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் "தலாயிலுன் நுபுவ்வத்" எனும் கிரந்தத்தில், நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் சமூகம் ஒரு மனிதர் வந்து, "நான் உங்களை விசுவாசிக்க வேண்டுமானால் செத்து மடிந்த எனது மகளை உயிர்பிக்க வேண்டும்" என்று சொன்னார். நாயகத்திருமேனி ரஸூலே அக்ரம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அப்பெண்மணியின் மண்ணறைக்கருகாமையில் வந்து, "இன்னாரின் மகளான பெண்மணியே! என்று அழைத்தார்கள். உடன் அப்பெண்மணி, இறையோனின் தூதுவரே! நான் உங்களுக்கு அடிபணிந்தேன் என்று சொன்னாள்" என்ற நீண்டதொரு ஹதீஸை வரைந்துள்ளார்கள்.

இது போன்று அண்ணல் பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தம் தாய், தந்தையர்களை, மரணித்த பின் உயிர்பித்து நீண்ட நேரம் உரையாடிய பின் மறைந்திருக்கிறார்கள்.

(ஆதாரம்:- ரத்துல் முஹ்தார், துஹ்பத்துல்-முரீத்)

இமாம் ஜலாலுத் தீன் சுயூதி (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் இது குறித்து பலமான ஆதாரங்களைக் கொண்ட நீண்டதொரு ஏட்டையே தீட்டியுள்ளார்கள்.

அல்லாமா உமர் அஹ்மது கர்பூத்தி (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்:-

ஒரு சமயம் ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ரஸூல் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை தங்கள் வீட்டிற்கு விருந்துண்ண அழைத்திருந்தார்கள். தாங்கள் வளர்த்த ஆட்டை நாயகத்திற்காக அறுத்து பக்குவப் படுத்தி, தங்கள் மனைவியிடம் ஒப்படைத்துவிட்டு வெளியே ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) சென்றுவிட்டார்கள். அவர்கள் மனைவி அண்ணல் நபிக்காக பெரும் மகிழ்வோடு முழுக் கவனத்தையும் சமையலில் ஈடுபடுத்தினார்கள்.

அவர்களின் இரு பிள்ளைகளில் ஒரு பிள்ளை மற்ற பிள்ளையை தரையில் கிடத்தி தந்தை ஆட்டை அறுத்தது போல் சிறுபிள்ளைத்தனமாக கழுத்தை அறுத்துவிட்டது. இச்செய்தியை பெருமையோடு தாயிடம் கூறவே, தாய் பெரும் விசனத்திற் குள்ளாகி பீதி கொண்டார்கள். இதைக் கண்ணுற்ற தனையன், தகப்பன் வந்துவிட்டால் என்ன நடக்குமோ என்று பயத்தால் மேல் மாடிக்கு ஏறிக் கொண்டிருக்கும் போது, அந்த மகனும் கால் சறுகி கீழே விழுந்து அவ்விடத்திலேயே மரணமாகிவிட்டான்.

கவலைக்கு மேல் கவலை. இக்கவலையை வெளிப்படுத்த முடியாத சூழ்நிலை. காரணம் அண்ணல் நபிக்கு விருந்து நடக்க வேண்டியதிருக்கிறது. இதில் ஏதாவது இடைஞ்சல் வந்து விடக் கூடாது என்ற மன உறுத்தல். கணவனுக்கும் தெரிந்துவிட்டால், ஏதாவது இடையூறு விருந்தில் வந்து விடுமோ? என்ற அச்சம். பொறுமையை மேற்கொள்வதன்றி வேறு வழியில்லை என்ற முடிவுடன் இரு கண்மணிகளான மக்களின் பிரேதத்தை ஒதுக்கமான ஒரு இடத்தில் மறைத்து வைத்து விட்டு, விருந்து வைபவத்திற்கான ஏற்பாட்டிலே, பொறுமைக்கு முன் மாதிரியாய் அமைந்த அம்மாது ஈடுபட்டார்கள்.

மிக்க மகிழ்ச்சி ததும்ப ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அண்ணலாரை அழைத்து வீட்டிற்கு வருகிறார்கள்.

அண்ணல் நபி நமது இல்லத்திற்கு விஜயம் தந்ததுவே பெரும் பாக்கியம் எனக் கருதிய அப்பெண்மணி, எவ்விதக் கவலையும் முகத்திலோ, பேச்சிலோ, நடையிலோ வெளிக்காட்டிக் கொள்ளாது விருந்தோம்பலுக்காக தயார் செய்த உணவுகளை விரிப்பில் பரப்பிவிட்டாள். பகிர்ந் துண்ணும் பண்பு படைத்த பாராளும் நபிகள் பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களிடம் உமது பிள்ளைகளை அழைத்துவாரும்! நாம் எல்லோரும் ஒன்றாக அமர்ந்து பகிர்ந்து சாப்பிடு வோம் என்று சொன்னார்கள்.

ஜாபிர் (ரலியல்லாஹு அன்ஹு) பிள்ளைகளை அழைத்துவர உள்ளே சென்று மனைவியிடம் பிள்ளைகள் எங்கே? நாயகம் அழைத்து வரச் சொல்கிறார்கள் என்று வினவ மனைவியார் நடந்தவற்றை விளக்கி வைக்கிறார்கள்.

நாயகத் திருமேனி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம்) அவர்கள் பிள்ளைகளின் சடலங்கள் எங்கே? என்று வினவ, சடலங்கள் நாயகத்திற்கு முன் கொண்டு வரப்பட்டன. பெருமானார் பிரார்த்தனை புரிந்ததும், இரு பிள்ளைகளும் உயிர்பெற்றெழுந்து அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடன் அதே விருந்தில் கலந்து உல்லாச மாக உண்டு மகிழ்ந்தனர். சுப்ஹானல்லாஹ்!

(மதாரிஜுன் நுபுவ்வத்)

மரணித்தவர்களை உயிர்பித்து பேச வைத்ததை விடவும், பேசுவதற்கே தகுதியற்றவைகளான கற்கள் பெருமானாரின் திருக்கரத்தில் பேசிய வரலாறும், பேரீத்த மரத்தின் கிளை தேம்பியழுத சரிதையும், நஞ்சு ஊட்டப்பட்டு சமைத்த ஆட்டுக் கறித் துண்டு பேசிய நிகழ்ச்சியும் விந்தையிலும் விந்தையல்லவா?

இதை விட மேலாக மௌட்டீகத்தாலும், குப்ராலும் மடிந்து போன லட்சோப லட்ச மக்களின் உள்ளங்களை ஈமானின்

பேரொளியால் உயிரோட்டமுள்ளவைளாக மாற்றியது என்ன சாதாரண அற்புதமா?

ஈஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் வயிற்றில் இருப்பதையும், வீட்டில் இருப்பதையும்அறிவித்தார்களே. அதை விடவும் பன்மடங்காக மறைவான காரியங்களைப் பற்றிய ஞானம் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கும் அருளப்பட்டிருந்தது.

ஆனால் வீணர்களான வழி கெட்ட தப்லீக் ஜமாஅத்தினர் போன்ற கூட்டத்தினர் அண்ணலாருக்கு மறைவான காரியங் களைப் பற்றிய அறிவு இல்லை என்று நாகூசாமல் புலம்புகிறார்கள்.

அது குறித்து எழுதப்புகின் விரிவாகும். விரிவஞ்சி இதோ தப்ஸீர் ஸாவியில் வருவதை மட்டும் வரைகிறேன்:-

"விசுவாசம் - ஈமான் கொள்வது கடமையா(ன அளவா)வது நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு இம்மை, மறுமையில் நடக்கும் மறைவான எல்லாக் காரியங்களையும் நிதர்சனம் காணும் அளவிற்கு அல்லாஹ் அறிவித்துக் கொடுத்தே ஒழிய இவ்வுலகத்தை விட்டும் அண்ணலார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மறையவில்லை" என்பதாகும். "எனக்கு துன்யா உயர்த்திக் காட்டப்பட்டது. எனது இந்த முன் கையைப் பார்ப்பது போன்று அந்த துன்யாவைப் பார்க்கிறேன்" என்ற ஹதீதும், "சுவர்க்கம், நரகம், அதில் உள்ளவற்றையும் பார்த்து வந்தேன்"என்ற ஹதீதும் (இதற்கு) ஆதாரங்களாக இருக்கின்றன. (தப்ஸீர் ஸாவி)

முந்தைய நபிமார்களுக்கு நடைபெற்ற அற்புதங்கள் அனைத்தும் அவர்கள் தம் ஜீவிய காலத்திலேயே நடந்து முடிந்து விட்டது. கியாமத் நாள் வரை நிற்கக் கூடிய அற்புதம் அவர்களுக்கில்லை.

ஆனால் கியாமத் நாள் வரை நிலைப்பாடாக, எவராலும் ஒரு எழுத்தையும் மாற்றவோ, மறுக்கவோ, மறைக்கவோ, புதிதாகத் திணிக்கவோ முடியாது. எந்நாட்டவரையும் சவா லுக்கு அழைத்த

வண்ணம் ஈடு நிகரில்லாமல் நிலைநிற்கும் அற்புதம் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு அருளப்பட்ட திருக்குர்ஆன் ஒன்றேதான்.

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் உம்மத்தினர்களில் இறையன்பர்களான அவ்லியாக்கள் கியாமத் நாள் வரை தோன்றி காலத்திற்கேற்ப பல அற்புதங்கள் காட்டுவதெல்லாம் பெருமானாரின் உயர்வை யும், கீர்த்தியையும் காட்டுவதாகவே அமைந்துள்ளது என்பதை முன் தொடரில் அறிந்து வைத்திருக்கிறோம்.

## குல்லத் – மஹப்பத்

## கலீல் – ஹபீப்

### இரண்டிற்குமிடையே உள்ள வேறுபாடுகள் :

குல்லத்தைப் பெற்ற கலீலுல்லாஹ் இப்றாஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் துணைப் பொருட்களினால் (பல அத்தாட்சிகளைக் காண்பிப்பதன் மூலம்) அல்லாஹ்வின் சமூகம் சென்றடைவார்கள். உதாரணமாக அல்லாஹ் சொல்கிறான்:-

"வ கதாலிக நுரீ இப்றாஹீம......" அவ்வாறே நாம் இப்றாஹீமுக்கு விண்ணுலக, மண்ணுலக இரகசியங்களைக் காட்டுவோம். (அதைக் கொண்டு நமது ஏகத்துவத்தின் மீது அவர் ஆதாரம் எடுத்துக் கொள்வதற்கும்) இன்னும் அவர் (அதைக் கொண்டு) உறுதி கொண்டவர்களில் நின்றும் ஆகுவதற்காகவும். அல்குர்ஆன் 6:75

இவ்விதமான அத்தாட்சிகளை கண்ட பின்னே இப்றாஹீம் கலீலுல்லாஹ் அல்லாஹ்வின் சமூகம் சென்றடைந்தார்கள்.

ஆனால் மஹப்பத்தைப் பெற்ற ஹபீபுல்லாஹ் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் துணைப் பொருட்களான அத்தாட்சிகள் எதுவுமில்லாமலேயே அல்லாஹ்வின் சமூகம் சென்றடைவார்கள்.

அல்லாஹ் சொல்கிறான்:- ஃபகான காப கவ்ஸைனி அவ் அத்னா..... அவர் வில்லின் இரு நுனி அளவிற்கு அல்லது அதை விட நெருக்கமாக நெருங்கியிருந்தார்.

(அல்குர்ஆன் 53:8)

இவ்விதமாக எவருமே நெருங்க முடியாத இடத்திற்கு ஹபீபை அல்லாஹ் தானாகவே விரும்பி அழைத்தான்.

கலீல் இறைவனிடம் பாவங்கள் மன்னிக்கப்பட வேண்டுமென ஆசை வைப்பார். "வல்லதி அத்மவு அன் யஃபிரலி கதீஅதீ யம்மத்தீன்" கூலி கொடுக்கப்படும் நாளில் என் தவறை எனக்கு மன்னிப்பதை நான் ஆசை வைப்பேனே அத்தகையவன் (எனது இரட்சகன்) (அல்குர்ஆன் 26:82)

ஆனால் ஹபீபுக்கு அவர் சிந்தையில் அவ்வெண்ணம் வர முன்பே "லியஃபிரகல்லாஹு மாதகத்தம மின் தன்பிக வமா தஅக்கர" உமது முன் பின் பாவங்களை அல்லாஹ் மன்னித்தருள்வதற்காக என்று அறிவிக்கப்படும். (அல்குர்ஆன் 48:2)

"வலா துக்ஜினீ யவ்ம யுப் அதூன்..... (இறைவா) மக்கள் எழுப்பப்படும் போது என்னைக் கேவலப்படுத்தாதே!" என கலீல் வேண்டிக் கொண்டார். ஆனால்,

யவ்மலா-யக்ஜுல்லஹுன்னபிய்ய-வல்லதீன-ஆமனு மஅஹு......... அல்லாஹ் நபியையும், அவர்களுடன் ஈமான் கொண்டவர்களையும் கேவலப்படுத்த மாட்டானே அந்த (கியாமத்) நாளில், (அல்குர்ஆன் 68:8) என்று ஹபீப் கேட்பதற்கு முன்பே நன்மாராயம் சொல்லப்படும்.

(நெருப்புக் குண்டத்தில் தள்ளப்படும் சமயமான) கஷ்ட நேரத்தில், "ஹஸ்பியல்லாஹு - அல்லாஹ் எனக்குப் போதும்" என்று கலீல் சொன்னார். ஆனால்,

"யாஅய்யுஹன்னபிய்யு ஹஸ்புகல்லாஹ்...... "நபியே! உமக்கு அல்லாஹ் போதுமானவன்" (அல்குர்ஆன் 8:63) என்று ஹபீபுக்கு அல்லாஹ் தானாகவே சொன்னான்.

“வஜ் அல்லி-லிஸான ஸித்கின்-பில் ஆகிரீன் (இறைவா) எனக்கு உண்மையின் நாவை (எனது புகழை எடுத்தோதும் நாவை) பின்னோர்களில் அமைப்பாயாக! (அல்குர்ஆன் 26:83) என்று கலீல் கேட்டார். ஆனால்,

“வரபஃனாலக-திக்ரக் நாம் உமது புகழை (எமது புகழோடு) உயர்த்தி விட்டோம்” (அல் குர்ஆன் 94:4) என்று ஹபீபுக்கு அவர் வேண்டாமலே அறிவிக்கப்பட்டது.

“வஜ்னுப்னி-வபனிய்ய-அன் நஃபுதல் அஸ்னாம.... (இறைவா!) என்னையும், எனது பிள்ளைகளையும் சிலை வணக்கம் செய்வதை விட்டும் தவிர்த்துக் கொள்வாயாக! (அல்குர்ஆன் 14:35) என்று கலீல் கேட்டார். ஆனால்,

“இன்னமா யுரீதுல்லாஹு லியுத்ஹிப அன்குமு ரிஜ்ஸ அஹ்லல் பைத்தி வயுதஹ்ஹிரகும் தத்ஹீரா (அல்குர்ஆன் 33:33) (நாயகத்தின் குடும்பத்தினரே!) அல்லாஹ் நாடுவதெல்லாம் உங்களைப் பரிசுத்தமாக்குவதையும், உங்களை விட்டும் அசுசியங்களை நீக்குவதையும்தான் என ஹபீபுக்கு அவர்களின் குடும்பத்தினர் சிலை வணக்கத்தை விட்டும் பரிசுத்தமானவர்கள் என்று புகழ்ந்து சொல்கிறான்.

கலீலானவர் அல்லாஹ் அல்லாதவைகள் அனைத்தை யும் விட அல்லாஹ்வையே மேலாக தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். ஆனால்,

ஹபீபை அல்லாஹ் தன்னல்லாத எல்லாப் பொருட்களை விடவும் தேர்ந்தெடுத்திருப்பான். ஹபீபுடைய கல்பு அல்லாஹ்வைத் தவிர வேறு வஸ்துவுக்கு விசாலமாகாதிருக்கும்.

இதே கருத்தில் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நவின்றுள்ளார்கள். “எனக்கு அல்லாஹ்வுடன் ஒரு நேரமுண்டு. அந்நேரத்தில் முர்ஸலான எந்த நபிக்கும், நெருக்கமான எந்த அமரருக்கும் (முடுகு வதற்கு) விசாலமாகாது” மற்றொரு அறிவிப்பில்:- எனது இரட்சகனல்லாது வேறு எவருக்கும் (முடுகுவதற்கு) விசாலமாகாத நேரம் என ஹதீஸில் வந்துள்ளது.

"வஜ்அல்னீ மின் வரததி ஜன்னதின்னயீம் - நயீம் எனும் சொர்க்கத்தின் அனந்தரங்களில் என்னையும் ஆக்குவாயாக!" (அல்குர்ஆன் 26:85) என்று கலீல் இறைவனிடம் பிரார்த்தனை புரிந்தார்.

ஆனால், "இன்னா அஃதைனா கல் கவ்தர் - (நபியே!) உமக்கு கவ்தரை (அதிகமான அருள்களை) நாம் நிச்சயமாகத் தந்து விட்டோம்" (அல்குர்ஆன் 108:1) என்று ஹபீபுக்குச் சொல்லப்பட்டது.

உயர் பதவியான 'கலீல்' பதவியை இப்றாஹீம் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களைத் தவிர்த்து அவர்கள் பொருட்டினால் வேறு எவருக்கும் கொடுக்கப்படவில்லை. ஆனால் அதை விடவும் உன்னதமான - உயர்வான 'ஹபீப்' பதவியை நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்குக் கொடுக்கப்பட்டதுடன் அவர்களின் பொருட்டினால் அவர்கள் தம் உம்மத்தினர்களுக்கும் கொடுக்கப் பட்டிருக்கிறது.

"குல் இன் குன்தும் துஹிப்பூனல்லாஹ்....... (நபியே! ஜனங்களுக்குச்) சொல்வீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பீர்களாயின் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான்". (அல்குர்ஆன் 3:31)

இறைவா! உனது ஹபீபான முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் பொருட்டினால் உனது மஹப்பத்தையும் - நேசத்தையும், அவர்களது மஹப்பத்தையும் இரு கரமேந்திக் கேட்கிறோம். ஏற்றுக் கொள்வாயாக. ஆமீன்!

# அண்ணல் நபி
## (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்)
## அவர்களின் தனிச் சிறப்புகள்

பெருமானார் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை மறுத்தோர்கள் எதிர்ப்புக் கணைகளை வீசும் போதெல்லாம் அதற்கு அல்லாஹ்வே எதிர்க்கணை களை வீசுவான். ஆனால் மற்ற நபிமார்கள் அவர்கள் தாமாகவே பதில் சொல்வார்கள். உதாரணமாக:-

1. நூஹ் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் கூட்டத்தினர் நூஹ் நபியை நோக்கி, "இன்னாலநராக பீ ழலாலின் முபீன்" (7:60) நிச்சயமாக நாம் உம்மை மாபெரும் வழிகேட்டில் இருப்பதாகக் காணுகிறோம் எனச் சொன்னார்கள்.

இதை மறுத்து நூஹ் நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் "யா கவ்மி லைஸபி ழலாலத்துன்" (7:61) எனது கூட்டத்தார்களே! எனக்கு எவ்வித வழிகேடும் இல்லை. என்றாலும் உலகத்தார்களை பரிபாலிக்கும் இறையோனிடமிருந்து தூதுவனாக இருக்கிறேன் என்று சொன்னார்கள்.

2. ஆது கூட்டத்தினர்களில் ஹூது நபியை மறுத்தவர் கள், ஹூது நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை முன் னோக்கி, "இன்னா ல நராக்க பீ ஸபாஹத்தின்... (7:66) நிச்சயமாக நாம் உம்மை மடத்தனத்தில் இருப்பதாகக் காணுகிறோம். இன்னும் நீர் (உமது தூதுவத்தில்) பொய்யர்களில் நின்றும் இருப்பதாகவும் எண்ணுகிறோம்" என்று வசைபாடினார்கள்.

இதை எதிர்த்து ஹூது நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் தமது கூட்டத்தினர்களை முன்னோக்கி, "யா கவ்மி லைஸ பீ ஸபாஹத்துன்..... (7:67) என் கூட்டத்தினர்களே! மடமை என்னைக் கொண்டில்லை. எனினும் உலகத்தைப் போஷிக்கும் இறையோனிடமிருந்து தூதுவனாக இருக்கிறேன் எனச் சொன்னார்கள்.

3. மூஸா நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை முன்னோக்கி "இன்னீ அழுன்னுக யா மூஸா மஸ்ஹூரா (17:101) மூஸாவே! நிச்சயமாக நான் உன்னை (பிறருக்கு சூனியம் செய்து, செய்து) சூனியம் மிகைக்கப்பட்டவனாக எண்ணுகிறேன்" என்று பிர்அவ்ன் சொன்னான்.

இவ்வாறு சொல்லிய பிர்அவ்னை எதிர்த்து மூஸா நபியே சொல்கிறார்கள். "வ இன்னீ ல அழுன்னுக யா பிர்அவ்னு மத்புரா (17:101) பிர்அவ்னே! நிச்சயமாக நான் உன்னை (நன்மைகள் அனைத்தையும் விட்டு தடுக்கப்பட்டு) அழிக் கப்படுபவன் என்று உறுதி கொள்கிறேன்.

4. மத்யன் கூட்டத்தினர் ஷுஐபு (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் நீண்டதொரு சொற்பொழிவுக்கு எதிர்ப்பாகச் சொன்னார்கள். "யா ஷுஐப்பு மா நப்கஹு..... (11:91) ஷுஐபே! நீர் சொல்பவற்றில் அனேகமானவற்றை நாங்கள் விளங்கு வதில்லை; மேலும் நிச்சயமாக உம்மை எங்களில் தாழ்ந்த வராகவும் காண்கிறோம். உமது குடும்பத்தினர்கள் இல்லை யெனில் உம்மை (கல்லால்) எறிந்திருப்போம். நீர் (கல்லால் அடிபடாமல இருக்க) எங்களில் மதிப்புள்ளவருமல்ல.

இதை மறுத்து ஷுஐபு நபி (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் சொன்னார்கள். யா கவ்மி அரஹ்தீஅஅஸ்ஸு..... (11:92) எனது கூட்டத்தினரே! அல்லாஹ்வை விட எனது குடும்பம் உங்கள் மீது பெரிதாகி விட்டதா? (அதனால் என்னை கல்லால் அடிக்காமல் விடுகிறீர்களா? எனது குடும் பத்தினரை விட மேலான அல்லாஹ்வை) முதுகுக்குப் பின் (வீசப்பட்ட பொருளாக) ஆக்கிவிட்டீர்களா?

நிச்சயமாக எனது இரட்சகன் நீங்கள் செய்பவற்றை சூழ்ந்து அறிந்திருக்கிறான். (அதற்குரிய கூலியைத் தருவான்.)

இவை போன்றே நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களையும் அவர்களது காலத்து காபிர்கள் எதிர்ப்புகளை அள்ளி வீசினர்.

ஆனால் அவைகளுக்கு அல்லாஹ் தனது ஹபீபாகிய நபிகள் நாயகத்தை பதில் சொல்ல விடாமல் தானே பதில் சொல்லியிருக்கிறான். உதாரணங்களை கீழ் காணுவோம்:-

1. "யா அய்யுஹல்லதீ நுஸ்ஸில அலைஹித்திக்ரு இன்னக ல மஜ்னூன் (15:6) (தமது எண்ணத்தில்) தமக்கு குர்ஆன் இறக்கப்பட்ட (தாக நினைப்ப)வரே! நிச்சயம் நீர் பைத்தியகாரர்" என்று காபிர்கள் நாயகத்தை எள்ளி நகையாடிய போது, அதற்கான பதிலை அல்லாஹ்வே சொல்கிறான்:-

"மா அன்த பி நிஃமதி ரப்பிக பி மஜ்னூன் (62:2) (நபியே!) நிச்சயமாக நீர் உமது இறைவனின் அருளினால் பைத்தியகாரரல்ல" வமா ஸாஹிபுகும் பி மஜ்னூன் (81:26) உங்கள் தோழர் பைத்தியகாரரல்லர்.

2. "வ இன்னா லதாரிகூ ஆலிஹதினா லி ஷாயிரின் மஜ்னூன் (37:36) (முஹம்மதுவான இந்த) பைத்தியகாரக் கவிஞனுக்காக எங்கள் தெய்வங்களை நாங்கள் விட்டு விடுவோமா?" என்று சாடினர்.

இச்சாடுதலுக்கு அல்லாஹ் மறுமொழி முழங்குகிறான்:- "பல்-ஜாஅ பில்ஹக்கி-(33:37) நிச்சயமாக இவர் சத்தியத்தைக் கொண்டு வந்திருக்கிறார். (இது போன்ற சத்தியத்தை ஈந்துள்ள) தூதர்களை உண்மைப்படுத்துகிறார். (காபிர்களே! இவர் கொண்டு வந்துள்ள சத்தியத்தை ஒப்புக் கொள்ளாவிடில்) கொடிய வேதனையை நிச்சயமாக சுகிப்பீர்கள்".

"வமா அல்லம்னா ஹுஷ்ஷிஃர வமாயன்பகீலஹு (36:69) அவருக்கு (நபிகளாருக்கு) கவிதையை நாம் கற்றுக் கொடுக்கவில்லை. அது அவருக்கு தகுதியும், அவசியமு மில்லை" என்றும் அல்லாஹ் மறு மொழி கொடுத்துள்ளான்.

"இத்யகூலுல் ழாழிமூன - இன் தத்தபிவூன இல்லா ரஜுலன் மஸ்ஹூரா (17:48) காபிர்கள் (முஃமின்களோடு சம்பாஷனை செய்யும்போது) சொல்வார்கள்:- (முஃமின்களே!) நீங்கள் சூனியமாக்கப்பட்ட மனிதரை (முஹம்மதுவை) பின்பற்று கிறீர்கள்" என்று இதற்கு பதிலை அல்லாஹ் பகர்கிறான்:-

“உன்லுர்-கைப-ழரபூலகல் அம்தால பழல்லு பலா யஸ்ததீவூன ஸபீலா (17:47, 25:8) (நபியே!) உங்களுக்கு (பைத்தியமாக்கப்பட்டவர், சூனியமாக்கப்பட்டவர், கவிஞர் என்றெல்லாம்) எப்படியோ உவமானமிடுகிறார்கள். (அதனால் நேர்வழியை) அவர்கள் சருகி விட்டார்கள். (நேர்) வழி (யின்) பக்கம் செல்ல சக்தி பெற மாட்டார்கள்”.

“வஇதா-துத்லா அலைஹிம்-ஆயாதுனா.... (8:31) அவர்கள் (காபிர்கள்) மீது நமது திருவசனங்கள் ஓதப்பட்டால் சொல்வார்கள்:- (ஆம்) நிச்சயம் நாங்கள் (ஓத) கேட்டோம். நாங்கள் நாடினால் இது போன்று சொல்லி இருப்போம். இது (குர்ஆன்) முன்னோர்களின் புராணங்களைத் தவிர வேறில்லையே” என்று காபிர்கள் சொன்னார்கள்.

இதற்கு பதிலை, “குல்இனிஜ்தம அத்தில் இன்ஸு - வல் ஜின்னு (17:88) இக்குர்ஆன் போன்றதை கொண்டுவர, மனுவர்க்கமும், ஜின் வர்க்கமும் ஒன்று கூடி ஒருவருக்கொருவர் துணையாக இருந்தாலும் இது போன்று அவர்களால் கொண்டுவர முடியாது என்று (நபியே!) கூறிவிடுவீராக!” என்று அல்லாஹ் தீர்ப்பு வழங்கிவிட்டான்.

“அம்யகூலு னப்தராஹு-குல்பஃது-பி சூரத்தின் மித லிஹி (10:39) அ(ந்த காபிரான)வர்கள் இதை (குர்ஆனை முஹம்மதான) இவர் புனைந்தார் என்று கூறுகின்றார்களா?

“(நபியே!) கூறுவீராக! இது போன்று ஒரு அத்தியா யத்தைக் கொண்டு வாருங்கள். (பார்ப்போம், நீங்களும் என்னைப் போன்ற அரபியர்கள் தானே. புனையப்பட்டது தான் என்பதில்) நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் அவன் (அல்லாஹ்) இன்றி மற்றவர்களை துணைக்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்” என்று அல்லாஹ் சவாலுக்கு அழைக்கிறான்.

“காலல்லதீன-கபரு-லவ்லா-நுஸ்ஸிலல் குர்ஆனு-ஜும்லதன் வாஹிதத்தன் (25:32) இவர் மீது குர்ஆன் மொத்த மாக (தவ்ராத், இன்ஜீல், ஸபூர் போன்று) இறக்கப்பட்டிருக்க லாகாதா? என காபிரானவர்கள் கேட்டார்கள்.

(அல்லாஹ் பதில் சொல்கிறான்:- "(உமது இருதயத்தை) அது கொண்டு உறுதிப்படுத்துவதற்காக வேண்டி. அவ்வாறே (பிரிந்ததாகவே இறக்கினோம்). இன்னும் (மனனம் செய்வதும், விளங்குவதும், எளிதாக அமைவதற்காக) ஒன்றன் பின் ஒன்றாக கொண்டு வந்திருக்கிறோம்". (25:33)

"வயகூலல்லதீன கபரூ லஸ்த முர்ஸலா (13:45) நீர் தூதுவராக இல்லை என (உம்மை) காபிரானவர்கள் சொல்வார்கள்.

"குல் கபா பில்லாஹி ஷஹீதன்-பைனி வபைனக்கும் வமன் இன்தஹூ இல்முல் கிதாபி (13:46) (நபியே!) கூறுவீராக! எனக்கும், உங்களுக்கும் மத்தியில் அல்லாஹ்வும், வேத ஞானமுடையவர்(களாக நல்மக்)களும் சாட்சியாளர்க ளால் போதும்" என்று அல்லாஹ் பதில் சொன்னான்.

இன்னும், "யாஸீன் வல்குர்ஆனில் ஹகீம், இன்னக லமினல் முர்ஸலீன் (37:1) உறுதியாக்கப்பட்ட குர்ஆனின் மீது ஆணையாக நிச்சயமாக நீர் ரஸூல்மார்களில் நின்றும் இருக்கிறீர்" என்றும் அல்லாஹ் விடை பகர்ந்தான்.

அ-பஅதல்லாஹூ பஷரன் ரஸூலன் (17:94) மனித னையா அல்லாஹ் தூதுவராக அனுப்பினான்? மலக்கை அனுப்பி இருக்கக் கூடாதா? என்று காபிர்கள் கேட்டார்கள்.

இதை மறுத்து அல்லாஹ் பதில் சொன்னான்:-

"குல்லவ் கான-பில்-அர்ழி மலாயிகதுன்..... (17:95) (நபியே!) கூறுவீராக! பூமியில் (மனிதர்களுக்கு பதிலாக) மலக்குகள் குடியிருந்து, நடந்து திரிவார்களேயானால் அவர் களுக்கு நாம் அனுப்பும் தூதுவர் மலக்காக இருந்திருப்பார். (ஒவ்வொரு இனத்தவர்கட்கும் அவர்களில் நின்றுமுள்ள வரையே தூதுவராக அனுப்பியுள்ளோம். அப்போது அவர்க ளுடன் உரையாடவும், கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளவும் முடியும். மலக்குகளைத் தூதுவராக அனுப்பினால், அவரைப் பாக்கவோ, உரையாடவோ முடியாது. ஆகவே மனிதர்களான உங்களுக்கு மனித இனத்தவரான தூதரை அனுப்பியுள்ளோம்)".

"வகாலு-மாலி ஹாதர்ரஸூலி யஃகுலுத்த ஆம்மா வயம்ஷி பில் அஸ்வாக் (25:7) என்ன? இந்த தூதர் உணவு சாப்பிடுகி றார். கடைவீதியில் நடக்கிறார் என்று (காபிர்கள்) சொன்னார்கள். இதற்கான பதிலை அல்லாஹ் சொல்கிறான்:- வமா அர் ஸல்னா-கப்லக மினல் முர்ஸலீன்...... (25:20) ரஸூல்மார்களில் நின்றும் எவரையும் அவர்கள் நிச்சயமாக உணவு உண்ணக் கூடியவர் களாகவும், கடைவீதியில் நடந்து வருபவர்களாகவும் அன்றி நாம் உமக்கு முன்னால் அனுப்ப வில்லை. (உணவு உண்பதற்காகவும், கடைவீதியில் நடந்து செல்வதற்காகவும் உம்மை மறுத்தால் எல்லா ரஸூல்மார் களையும் மறுத்தவர்களேயாவார்கள்.)

"வகாலு-லவ்லா-நுஸ்ஸில ஹாதல் குர்ஆனு அலா ரஜுலின் (43:31) (எங்களது மக்காதாயிப் எனும்) இரண்டு கிராமங்களில் மிக உயர்வான ஒரு மனிதரின் மீது (மக்காவில் வலீதுப்னு முகீரா மீது அல்லது தாயிப் நகரில் உர்வதுப்னு மஸ்வூது மீது) இந்த குர்ஆன் இறங்கியிருக்கலாகாதா? என்று காபிர்கள் கேட்டார்கள்.

அல்லாஹ் பதில் சொல்கிறான்:- "அஹும் யக்ஸிமூன ரஹ்மத ரப்பிக (43:32) (நபியே!) அவர்கள் உமது இரட்சக னின் ("நுபுவ்வத்" எனும்) ரஹ்மத்தை பங்கீடு செய்கின்றனரா? அவர்களின் இவ்வுலக வாழ்க்கையை நாம் பங்கீடு செய்கின் றோம். அவர்களில் சிலரை சிலரைக்காண அந்தஸ்தை நாம் உயர்த்தி யிருக்கிறோம். (இவ்வாறு இருக்க நுபுவ்வத்தை அவர்கள் பங்கீடு செய்ய என்ன உரிமை இருக்கிறது?")

"வகாலல்லதீன கபரு-ஹல்நதுல்லுகும் அலா ரஜுலின் (34:7) (ஜனங்களே!) நீங்கள் துண்டு துண்டாக்கப்பட்டால் (பின்பு) நிச்சயம் நீங்கள் புதிய படைப்பாக (கியாமத் நாளில் எழுப்பப்படக் கூடியவர்களாக) இருக்கிறீர்கள் என உங்களுக்கு அறிவிக்கின்ற ஒரு மனிதரை (முஹம்மதுவை) நாங்கள் அறி விக்கட்டுமா? என்னே அவர் அல்லாஹ்வின் மீது பொய்யை புனைந்துவிட்டாரா? அல்லது பைத்தியம் அவருக்குக் கண்டு இருக்கிறதா?" என்று (வியப்போடும், கேலியோடும்) காபிரானவர்கள் சொன்னார்கள்.

“பலில்லதீன லாயுமினு பில் ஆகிரத்தி (34:8) மறுமுறை எழுப்பப்படுவதையும், வேதனை செய்யப்படுவதையும் (பொதிந் திருக்கும்) மறுமையை விசுவாசம் கொள்ளாதவர்கள் (மறுமையில் வேதனையிலும், இம்மையில் சத்தியத்தை விட்டும்) வெகு தூரமான வழிகேட்டிலும் இருக்கிறார்கள் என்று அல்லாஹ் அதற்கு உடனடியாக சாட்டை அடி கொடுக்கிறான்.

மக்கத்துப் பள்ளியில் “பனீஸஹ்ம்” எனும் நுழைவு வாசலில் அண்ணல் நபிகளார் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்களை ஆஸுப்னு வாயிலுஸ்ஸஹ்மி என்பவன் சந்தித்து உரையாடி விட்டு பள்ளியின் உள்ளே சென்றான். அங்கிருந்த குரைஷித் தலைவர்கள் நீ யாருடன் உரையாடி வந்தாய்? என ஆஸுப்னு வாயிலை வினவினர். அதற்கு அவன் (உலகில் புகழை எடுத்தோதும்) பிச்சள பாக்கியமற்ற ஒருவருடன் (முஹம்மதுடன்) என்று, (நபிகள் நாயகத்தின் ஆண் மகனான “காஸிம்” என்பார் மரணித்து விட்டதைக் குத்தலாக) சுட்டிக் காட்டினான்.

இதற்கான பதிலை அல்லாஹ், “இன்ன ஷானி அக ஹுவல் அப்தர் (108:3) நிச்சயமாக உம்மை (மனவேதனைக் குள்ளாக்கி) கோபத்தில் ஆழ்த்திய (ஆஸுப்னு வாயில் என்ப)வன் தான் பிச்சள பாக்கியமற்றவன்” என்று மறுமொழி பகர்ந்தான்.

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு, அன்திர் அஷீரத்தகல் அக்ரபீன் (26:214) (நபியே!) நீர் உமது நெருக்கமான பந்து மித்திரர்களுக்கு எச்சரிக்கை செய்வீராக! என்ற திருவசனம் இறங்கியபோது, வெளிக்கிளம்பி “ஸபா” எனும் மலை உச்சியில் நின்று அவர்கள் தம் குடும்பத் தினர் ஒவ்வொருவரின் பெயர் சொல்லி கூக்குரலிட்டார்கள்.

அன்னவர்களின் ஆசாரப்படி அனைவரும் அங்கு குழுமினர். அதுபொழுது நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் “இதோ குதிரைப்படையினர் (உங் களை திடீர் தாக்குதல் செய்வதற்கு) மலையின் மறு புறத்தில் விரைந்து வருகின்றனர் என்று நான் சொன்னால் என்னை நம்புவீர்களா? என விசாரித்தார்கள்.

குழுமியிருந்தவர்கள் (அத்தனைபேரும் ஒருமித்த கருத்தில்) "உம்மீது (இதுநாள் வரை) எவ்வித பொய்யுரையும் நாங்கள் கேட்டதில்லை என முழங்கினர். இது சமயம் ஏந்தல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் உங்க ளுக்கு முன்னால் நிகழ இருக்கும் (கியாமத் நாளின்) கொடூர மான வேதனை குறித்து எச்சரிக்கிறேன்" என நவின்றார்கள்.

உடனே அபூலஹப் என்பவன், "இதற்காகவா எங்களை அழைத்தீர்? உமது இருகரமும், நீரும் நாசமாகக்கடவது" என்று சொன்னான்.

இதற்கு மறுமொழியை அருள்வடிவாய் அவதரித்த அண்ணலார் சொல்லி விடவில்லை. இதற்கான பதிலாக இறையோனே தனது திருமறையில் ஓர் அத்தியாயத்தையே இறக்கி விட்டான். அது தான் "தப்பத்யதா-அபீ-லஹபின்-வதப்ப...... அபூலஹபின் இரு கைகளுமே நாசமாகட்டும். அவனே நாசமாகட்டும்" (111:1) என்பதாகும்.

நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர் களுக்கு சில தினங்களாக வஹீவரசுணக்கம் ஏற்பட்ட போது, "இவரை இவரின் இரட்சகன் (கை) விட்டு விட்டான். அதிருப்தி கொண்டு விட்டான்" என காபிர்கள் தூற்றித் திரிந்தார்கள்.

இச்சொல் பெருமானாருக்கு பெரும் வேதனையைக் கொடுத் தது. தனது ஹபீபின் இவ்வேதனையை போக்குவான் வேண்டி:

"வல்லுஹா வல்லைலி இதா சஜா........ (93:1) லுஹா நேரத்தின் மீது ஆணையாக! இருள் கப்பிய இரவின் மீது ஆணையாக! (நபியே!) உமது இறைவன் உம்மைக் கைவிட்டு விடவில்லை. உம்மீது கோபப்படவில்லை" என்ற திருவசனத்தை இறக்கி வைத்தான்.

"வயகூலுன ஹுவ உத்னுன் (9:62) அவர் (முஹம்மது நபி) செவியாக (சொல்பவற்றை யோசிக்காமல் ஒப்புக் கொள் பவராக) இருக்கின்றார் என (முனாபிகீன்கள்) சொல்வார்கள்.

இதற்கான பதிலை, "குல் உத்னு கைரின் லகும் (9:62) அவர் உங்களுக்கான நன்மை (கேட்கும்படி)யான செவியாக

இருக்கிறார். அல்லாஹ்வைக் கொண்டு விசுவாசித்திருக்கிறார். விசுவாசி(களின் சொற்)களை ஒப்புக் கொள்பவராகவும், அருளாகவும் இருக்கிறார் என (நபியே!) நீர் கூறிவிடும் என அல்லாஹ் பதில் சொல்லியிருக்கிறான்.

அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலியல்லாஹுஅன்ஹா) அவர்கள் மீது அபாண்டமாக பொய்யை புனைந்தபோது, அதற்கான மறுப்பை, உண்மைநிலையைக் குறித்து இப்க்குடைய -படுதூரு சம்பந்தமான தொடர் ஆயத்துக்களை இறக்கி, அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலியல்லாஹுஅன்ஹா) அவர்கள் மிக தூய்மையானவர்கள் என ஆணித்தரமாக அறிவித்து அண்ண லாரின் மனதிற்கு நிறைவளித்திருக்கிறான்.

வெகுநேரம் கதிரவனின் கதிரொளியில் நின்று சாதித்து விடலாம். ஆனால் அவனின் கதிரொளியை தாங்கிய பாறைக் கல்லிலோ, இரும்புத் துண்டிலோ சற்று நேரம்கூட நிற்க முடியாது. அப்படி நின்று சாதனை புரிந்தாலும், பாதத்தைப் பொசுக்கிவிடும்.

இது போன்று பேரொளியான அல்லாஹ்வை பேசினாலும், ஏசினாலும் உடனடியாக பரிகாரத்தை கொடுத்து விட மாட்டான்.

ஆனால், அவனது ஹபீபை ஏசினாலும், சற்று மன வேதனைப்படுத்தினாலும் உடனே அதற்கான 'பதிலை- தண்டனையை கொடுத்துவிடுகிறான் என்பதையே நாம் மேலே கண்டோம்.

இதே கருத்தில் தான் ஹதீஸே குத்ஸியில், ''மன் ஆதாலி - வலியன்-பகத்-ஆதன்துஹு-பில்ஹர்பி (மிஷ்காத்) எனக் குரிய நேசரை நோவினை செய்தால் என்னுடன் யுத்தம் செய்ய பிரகடனப்படுத்திவிட்டேன்'' என முழங்கியிருக்கிறான்.

நாட்டிற்கு, வீட்டிற்கு, பெற்றோருக்கு, சகோதரர்கட்கு மாறு செய்தால் குற்றவாளியாவான். ஆனால் அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு மாறு செய்தால் உடன் காபிராகி விடுகிறான். (மஆதல்லாஹ்)

''வமன் யுதியிர் ரசூல-பகத் அதா அல்லாஹ் (4:79) எவன் ரஸூலுக்கு வழிப்படுகிறானோ, அவன் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு விட்டான்''.

ரஸூலுக்கு மாறு செய்தவன் அல்லஹ்வுக்குமாறு செய்தவனாக ஆவான் என்பதில் ஐயப்பாடு உளதோ?

உலகக் காரணரான காருண்ய நபியின் கருணையால் ஈருலகிலும் முக்தி பெற்று சித்தியடைந்த இறைநேசச் செல்வர்களின் வரிசையில் நன்மையும் ஆக்கியருள இருகரமேந்தி இறையோனிடம் இறைஞ்சுவோமாக.

நிறைவடைந்தது.

முதற் பதிப்பு : 1396 ஜுமாதுல்ஊலா - 1976 மே

இரண்டாம் பதிப்பு : 1413 ரபீவுல் அவ்வல் - 1992 ஆகஸ்ட்

மூன்றாம் பதிப்பு : 1428 ரமழான் - 2007 அக்டோபர்

அச்சிட்டோர் :

**மாஸ் கிரா.ஃபிக்ஸ்**

எண். 7. குலாம் முஹம்மது முஹைதீன் தெரு,
ஆயிரம் விளக்கு, சென்னை - 600 006.